# அமராவதியின் காதல்

## சிறுகதைகள்

**(Short Stories in Tamil)**

**சத்யபிரபா**






சந்திரோதயம் பதிப்பகம், மதுரை.

**நூல் விவரம்**

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அமராவதியின் காதல் |
| துறை | : | சிறுகதைகள் |
| ஆசிரியர் | : | சத்யபிரபா |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>3/422 திருவள்ளுவர் தெரு,<br>தினமணி நகர், மதுரை – 625 018<br>தொலைபேசி எண் : 7010997639 |
| பதிப்பு | : | ஆகஸ்ட் 2020 |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 100 |
| விலை | : | Rs.120/- |

- - - - - - - - -

| | | |
|---|---|---|
| *Title* | : | *Amaravathyin Kadhal* |
| *Subject* | : | *Short Stories* |
| *Author* | : | *Sathyapraba* |
| *Cover Design* | : | *C. Meenatchi* |
| *Publisher* | : | *Chandrothayam Pathippagam*<br>*3/442 Thiruvalluvar Street*<br>*Dinamani Nagar, Madurai – 625 018*<br>*Phone : 7010997639* |
| *Month of Publish* | : | *August 2020* |
| *Pages* | : | *100* |
| *Price* | : | *Rs.120/-* |

# உள்ளடக்கம்

## அணிந்துரை

முனைவர். **ஆ.பாப்பா**
தமிழ் உதவிப்பேராசிரியர்
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை



மதுரை நகரம் வரலாறு, அரசியல், மொழி, பண்பாடு, படைப்பாக்கம் என அனைத்துத் துறைகளிலும் மாற்றத்தை, திருப்பத்தைத் தந்திருக்கிற சிறப்புக்குரியது. அதேநேரம் எளிமைக்குப் பெயர்போனது. கூட்டுணர்வு மிக்கது. தன்வயப்படுத்திக்-கொள்ளும் திறன் மிக்கது. இன்னும் நிறைய...... மதுரையைச் சுற்றிய கழுதை கூட வெளியில் செல்ல விரும்பாத மதுரையின் சிறப்பு இந்த முன்னுரையில் சொல்லப்படுவதன் நோக்கம் ***அமராவதியின் காதல்*** சிறுகதைத் தொகுப்பிற்குச் சொந்தக்காரர் மதுரைக்காரர். தன்னைப்போலவும் தனது ஊரைப்போலவும் கதைகளையும் மிக எளிமையாகப் படைத்திருக்கிறார். சிறுகதைகளைப் படித்துப்பார்த்தவுடன் மனதில் தோன்றியது இதுதான். விடமனமில்லை. இணைத்துவிட்டேன். மதுரையைப்பற்றி ‘அறிந்தவர்களுக்கு’ இது புரியும்.

புதியதொரு இலக்கிய வகைமை தோன்றும்போது சிக்கல்கள் வரத்தான் செய்யும். முதலில் எழுதப்பட்ட உரைநடையில் ஒரு வாக்கியம் பக்க அளவிலேயே இருந்தது. அதேபோலத்தான் புதினங்களும். படித்துமுடிக்கப் பொறுமையின்றி சமூக, கால மாற்றத்திற்கு ஏற்றவாறு சிறுகதை என்கிறதொரு வகைமை தோன்றி வளர்ந்தது. தொடர்ந்த படைப்புக்கள் புதிய வகைமை வளர்ச்சிக்கு வழிவகை செய்கின்றன. அவ்வகையில் இக்கதைத் தொகுப்பும் மிக எளிமையான கதைகள் என்கிற புதிய நிலைக்கு வளர்ச்சி பெற்றிருக்கிறது.

அமராவதியின் காதல் எனும் இந்நூல் இணைய இதழ்களில் வெளிவந்த சிறுகதைகளின் தொகுப்பாகும். சிறுகதைக்கென இருக்கக்கூடிய எளிமையான வாக்கியங்கள், சுருக்கமான உரையாடல், போன்றவற்றைக் கதை ஆசிரியர் மனதிலிருத்தி மெனக்கெட்டு எழுதியதாகத் தெரியவில்லை.

ஆனால் கதைகளை வாசிக்கும்போது இயல்பாக இவையனைத்தும் பொதிந்துள்ளதை உணரமுடிகிறது. **‘சாதிக்கட்டுப்பாடுகள் கொஞ்சமாக மறைந்தன. எல்லாரது வீடும் வாசல் உயர்த்திக் கட்டப்பட்டன’ (காதல் கிளிகள்)** எனும் வரியை வாசிக்கும்போது அக்காலச் சமூகத்தில் நிலவிய சாதிப்பாகுபாட்டை அதிலும் வீட்டுக் கட்டமைப்பில் கூடச் சாதிப்பாகுபாடு அமைந்திருந்ததை அறியமுடிகிறது. கிராமங்களின் வீடுகளில் திண்ணைப் பயன்பாடு குறித்து நாம் அறிந்திருப்போம். வழிப்போக்கர்கள் களைப்பாறிச் செல்வதற்காகவே கட்டப்பட்டவை என்று பெருமையாகச் சொல்லிக்கொள்வோம். ஆனால் அதன் பின்னும் சாதி ஒளிந்திருப்பதை **‘வீட்டின் இருபக்கமும் ஒரு ஆள் கால் நீட்டிப் படுக்கும் அளவுக்கு திண்ணை எடுத்தனர்’ (காதல் கிளிகள்)** என்று எளிமையாகப் போகிற போக்கில் ஒருவரியில் சொல்லிக்கொண்டு போவது ஆசிரியரின் எழுத்தாற்றலைப் புலப்படுத்துகிறது.

நமது சமூகத்தில் பெண்கள் முடிவெடுக்கத் தெரியாதவர்கள், இரட்டை மனதுக்காரர்கள் என்ற கருத்து காலங்காலமாகக் கட்டமைக்கப்பட்டு வந்துள்ளது. இக்கதைத் தொகுப்பும் கட்டமைக்கப் பட்டதையே வெளிப்படுத்தினாலும் முடிவில் சுயமாகப் பெண் முடிவெடுப்பது பெண் மற்றும் சமூக முன்னேற்றத்திற்குச் சாதகமாகவே அமையும் என்பதை **அவிழ்க்கப்பட்ட முடிச்சு, காதல் கிளிகள், வேக்காடு** சிறுகதைகள் காட்டுகின்றன. **அவிழ்க்கப்பட்ட முடிச்சு** கதையில் நமது சமூகத் திருமணப் பழக்கவழக்கம் ஒன்று சர்வ சாதாரணமாகச் சொல்லப்படுகிறது. அதேநேரம் கணவனின் தம்பியை மணமுடித்து வைத்தாலென்ன என்கிற பெண்ணின் கேள்வி சிந்திக்கத்தக்கது. ஆண்களால் பெண்கள்; கைவிடப்படும் இன்றைய சூழலிலும் முடிவைத் தேடாமல் முடிவெடுத்து வாழ்வைச் செம்மையாக்கிக்கொள்ளும் பெண் கதாப்பாத்திரங்களைக் கதைகளில் காணும்போது மனம் மகிழ்கிறது. அதேநேரம் **அந்த போட்டோவில நான் நல்லாருந்தேன் மாமன்கிட்ட போட்டோவக் காட்டல. யாருகிட்டயும் காட்டல என்பதும் எனக்கு நாயம் பேச யாருமில்லையே என்று தவிக்கும் நிலையும் (காதல் கிளிகள்)** சமூகத்தில் பெண்ணிற்கான இடம் இவ்வளவுதான் என்பதை அறைந்தார்போல் சொல்லுவது வலியைத்தருகிறது.

*கணவனை இழந்த, தன் பிள்ளையை நன்றாகப் படிக்க வைக்க நினைக்கும் ஒரு பெண்ணின் மன உணர்வுகளை அழகாகச் சொல்லுவது அதேநேரம் ஆங்கில மோகத்தின் வெளிப்பாடாக அமைந்தது* **ஒரு இங்கிலீஷ் கனவு... கதை**. *தமிழ்பேசும் பிள்ளைகளிடம் தன் மகளைப் பேசவிடாத ராதாமணி தமிழ்கூட எழுதப்படிக்கத் தெரியாத ஒருவனுக்கு மணம் பேசினாள் என்பது சராசரித் தமிழ்த்தாயின் உணர்வு வெளிப்பாடுதானே.*

*நவீன, தகவல் தொழில் நுட்ப, உலக மயமாக்கப்பட்ட என்று என்னவெல்லாமோ சொல்லப்பட்டு வருகிற சூழலில் காதல் மட்டும் மாறாது தன்னிடத்தை எதற்காகவும் விட்டுக்கொடுக்காது இருப்பதைச் சுட்டுவதுதான் அமராவதியின் காதல் சிறுகதை. மலரினும் மெல்லிது அமராவதியின் காதல்.*

*இக்கதைத்தொகுப்பில் நிறைய ஆழமான, இக்காலகட்டத்திற்குத் தேவையான கருத்துக்கள் மென்மையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.*

1. *நேசம் என்பது ஒருவரிடம் காட்டுவதல்ல. அவர் சார்ந்த அனைவரிடமும் காட்டுவதாகும் (அமராவதியின் காதல்).*
2. *பிறர் பொருளுக்கு ஆசைப்படாத ஒருவர். அவருக்கு நன்றிக்கடனை தீர்க்க நினைக்கும் மற்றொருவர். நன்றி தேவதை இரண்டு வீட்டுக்குமாக மாறி மாறி அலைந்து கொண்டிருந்தாள் (டீச்சர் வீடு).*
3. *ஜன்னல் வழியாகப் பார்க்கிறேன் பட்டணம் பின்னோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது என்ற வரி ஆகுபெயராகப் பட்டண வாழ்க்கையைச் சுட்டுகிறது (பட்டிக்காடா பட்டணமா).*
4. *பணம் மட்டுமே வாழ்க்கையல்ல என்பது ‘நான் காசிருந்தும் ஆருமில்லாத அனாதையாய்ட்டேனே’ என்ற வரி மூலம் வெளிப்படுகிறது (காதல் கிளிகள்).*
5. *தனக்குத் தேவையெனில் மனிதனுக்கு எல்லாவிதமான யோசனையும் வரும் இன்னும் அவரவர் யோசனை அவரவருக்கு நியாயமாகப்படும் (தன் பிள்ளை தானே கெடும்).*

எளிமையான நடை என்று ஒரு வார்த்தையில் முடித்துவிட்டாலும் மொழிநடையைக் குறிப்பிட்டுத்தானாக வேண்டும். நிறைய இடங்களில் மொழிநடை ஆசிரியரின் மொழிபெயர்ப்பு அனுபவத்தைக் காட்டுகிறது. மினி இப்போது அதிகாரத்தில் மேக்சிமம் ஆகிவிட்டாள், அவள் முகத்தில் தன் தோழியின் முகம் டபுள் எக்ஸ்போஷர் ஆயிற்று, தென்றல்போல வந்தான். புயல்போல புறப்பட்டுவிட்டான், இரண்டு உள்ளங்கள் கரைந்துபோன உழைப்பையும் கலைந்துபோன கனவுகளையும் நினைத்து அழுதன. என்னை நிக்கவச்ச சாமியும் போச்சு நிலைக்க வச்ச சாமியும் போச்சு போன்ற கருத்துக்கள் என்றென்றைக்கும் மனதைவிட்டு அகலாதவை.

இன்றைய சமூகத்தின் ஏமாற்றுத்தனத்தை அப்பட்டமாக எடுத்துக்காட்டுவது "**ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே கெடும்**" எனும் தலைப்பிலான கதை. பழமொழியை மறுவாசிப்பிற்குள்ளாக்கும் முரண்பாடான தலைப்பிலமைந்த கதை. மற்றொன்று "**யாரும்மா மைனரு**" என்கிற கதை. குழந்தைத் தொழிலாளர்களே இருக்கக்கூடாது என்று அரசாங்கமும் தனியார் அமைப்புகளும் முனைந்து கொண்டிருக்க இப்படி ஏமாற்றுபவர்களும் இருப்பதைக்காட்டுகிறது. இக்கதையில் வருகின்ற சிறுவனின் கதாப்பாத்திரத்தைக் காணும்போது சில நேரங்களில் சிலரை அவர்களாகவே வாழும்படி விட்டுவிடுவது சரியோ என்றும் எண்ணத் தோன்றுகிறது.

கற்பை இருபாலருக்கும் நடுவில் வைப்போம் என்ற பாரதியின் கனவு நனவாகியதோ இல்லையோ இன்றைய செய்தித்தாள்களைப் படிக்கும்போது பெண்களின் பக்கமும் தவறு இருப்பதை மறுக்கமுடியாது. இச்சிறுகதைத் தொகுப்பிலும் சுடுகின்ற உண்மையாகப் பெண்களின் நிலை சுட்டப்பட்டுள்ளது. சமூகத்தில் நல்லதும் உண்டு. கெட்டதும் உண்டு. நல்லனவற்றை அழகாகவும் எளிமையாகவும் சொல்லியதோடு நல்லது அல்லாததையும் சுட்டிச் சென்றது கதாசிரியரின் சமநிலையைக் காட்டுகிறது. ஆசிரியர் நிறைய நூல்கள் எழுதிய அனுபவமிக்கவர். அன்னாரது இச்சிறுகதைத் தொகுப்பு எதிர்காலத்தில் மாணவர்களுக்குப் பாடநூலாக அமைவது நலம் என்கிற விருப்பத்துடன் முன்னுரையை எழுதியதில் மகிழ்கிறேன்.

அன்புடன்
**ஆ. பாப்பா**

# *1. அமராவதியின் காதல்*

*‘அண்ணே என் கோலத்தைப் பார்த்தீங்களா’ என்று அமராவதி வீட்டுக்குள் நுழைந்தாள். “என்னாச்சு பெரியவர் தவறிட்டாரோ. நமக்கு ஒண்ணும் தகவல் வரலையே” என்று பொன்னையா வாத்தியார் யோசித்தார். அமராவதியின் சத்தம் கேட்டு வாத்தியார் சம்சாரம் ஹாலுக்கு வந்தாள்.*

*அமராவதி தலையை தட்டி அள்ளி முடிந்தாள், சேலையை முழங்காலுக்கு மேல் திரைத்துக் கொண்டு காலை நீட்டியபடி சுவரில் சாய்ந்து உட்கார்ந்தாள் மேல் சேலயை தளர விட்டாள். முந்தானையால் முகத்தைத் துடைத்தாள் வியர்வை, ஆயாசம் என்ற பெயரில் ‘தன்னை’ முடிந்ததை வெளிப்படுத்தினாள்.*

*வாத்தியாரைப் பார்த்து, அண்ணே எவனோ என் காதை அறுத்துட்டான். சவடியைப் பிடுங்கிட்டு ஓடிட்டான். இப்ப காதைத் தச்சு தோடு போட்டிருக்கேன் என்றாள்.*

*“அப்பாடா இவ்வளவு தானா நான் என்னவோ ஏதோன்னு நெனச்சேன்” என்று மனதுக்குள் சொல்லிக் கொண்ட வாத்தியாருக்கு அவர் காது வளர்த்து சவடி போட்டிருந்த ஞாபகம் கூட இல்லை.*

*வாத்தியார் சம்சாரம் தங்கம்மா காபி கொண்டு வந்து கொடுத்துவிட்டு சிறிதுநேரம் பேசிவிட்டு மார்க்கட்டுக்குப் போவதாகச் சொல்லிவிட்டு கிளம்பிவிட்டாள்.*

*இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை அமராவதி கிழங்கு, கடலை, கருப்பட்டி, கேப்பை என்று ஏதாவதொன்றைக் கொண்டு வருவாள் பேசிவிட்டுப் போய்விடுவார். குடும்பத்தாரிடம் பாசமாக இருப்பாள்.*

*ஒருநாள் வந்தவள் என்ன செய்தாள் தெரியுமா? அண்ணே உனக்கு மச்ச சாஸ்திரம் தெரியும்னு அவர்*

சொன்னாரு என்றாள். ''இல்லையே எனக்கு என்ன தெரியும்? ஒரு நாள் அண்ணன் வயித்துல வலதுபக்கம் மச்சம் இருக்குன்னார். நான் அப்ப கடைசிவரைக்கும் உனக்கு நல்ல சாப்பாடு உண்டுன்னு சொன்னேன்'' அவ்வளவுதான்.

உடனே அமராவதி, ''அதுதான் அவர் சொன்னாரு, எனக்கு பாருண்ணே, இங்கே ஒரு மச்சம் இருக்கு'' என்றவள் சேலையை தொடை வரை உயர்த்தினாள். வாத்தியார் தங்கம்மா கொஞ்சம் தண்ணி கொடு என்றார். வெளியே வந்து தண்ணியில் வாய்கொப்புளித்தார். மீண்டும் ஹாலில் வந்து உட்கார்ந்து வெற்றிலை போட்டார். அமராவதி சேலையை ஒழுங்காகப் போட்டு உட்கார்ந்திருந்தாள்.

வாத்தியார் ''நீயும் வெத்திலை போடு என்றார். அமராவதி, 'தங்கம்மாக்கா உள்ளே இருக்கியா? வெளியே போய்ட்டியோன்னு பாக்கை கையில் எடுத்தபடி கிளம்பிவிட்டாள்.

தங்கம்மா ஹாலுக்கு வந்தார். வாத்தியாரைப் பார்த்து ''என்னங்க இது. சேலையை தொடை வரைக்கும் தூக்குது'' என்றாள். எனக்கு ஒன்னும் புரியலை அது மனசுல ஏதோ இருக்கு நாம அதைத் தெரிஞ்சதா காட்டிக்க வேண்டாம். இப்படியே சமாளிச்சுடுவோம். அது ரோசக்கார பொம்பள. நாம் ஏதாவது சொன்னால் போற வழியிலே தூக்குப் போட்டுக்குவா'' என்றார்.

தங்கம்மா விடுவதாக இல்லை. ஒங்களுக்கு அமராவதிய சின்ன வயசுலேயே தெரியுமா? ''இல்ல தங்கம் எனக்கு அவள் கணவரைக்கூட அதிகமாக தெரியாது. நான் படிச்சவன்னு பெரிய வீட்டுக்காரரு என்னை கல்யாணம் பேசும்போது பத்திரிகை எழுத, கவர்ண்மெண்டு ஆபிசுக்கு மனு எழுத கூப்பிட்டுப் போவாரு அவ்வளவு தான். நண்பர் கூட இல்லை. தெரிஞ்சவரு என்றார் பொன்னையா வாத்தியார்.

இப்படியே வந்து போய் கொண்டிருந்த அமராவதி ஒரு நாள் வரும்போது பொன்னையா வாத்தியார், இல்லை. அவர் மாரடைப்பில் இறந்துவிட்டார். அமராவதி ஓவென்று ஒப்பாரி வைத்து அரைமணிநேரம் மனசுவிட்டு அழுதாள்.

*தங்கம்மாவுக்கு அன்று தான் துக்கம் தீர்ந்தது போலிருந்தது. மனசின் அழுத்தம் குறைந்து லேசாக இருந்தது. இங்கு அன்றைக்கு யாருமே நெஞ்சில் அடித்து. 'ஒப்புச் சொல்லி' அழவில்லை. அப்படி அழுதிருந்தால் மனதின் பாரம் குறைந்திருக்கும். பொன்னையா வாத்தியார் மறைந்து ஆறு மாசமாகிவிட்டது. தீபாவளி வந்தது ஒருவருக்கும் சின்னப்புள்ளைகளுக்குக் கூட புதுத்துணி எடுக்கவில்லை இட்லி அவிக்கல கறி எடுக்கல ஒரே அழுகை. தங்கம்மா மகன், மகளுடன் உட்கார்ந்து அழுதுகொண்டு இருந்தார். மருமகளும் சேர்ந்து அழுதாள்.*

*பக்கத்து வீட்டுக்காரர்கள் கொண்டு வந்து சின்னப் பிள்ளைகளுக்குக் கொடு என்ற பலகாரம் கொடுத்தனர். திடீரென்று புயல் போல நுழைந்தார். அமராவதி களைப்பும் தவிப்புமாக உட்கார்ந்தார். தலையில் பெரிய சில்வர் தூக்கு அதில் இட்லி, கறிக்குழம்பு கையில் சின்ன தூக்கு அதற்குள் முறுக்கு அதிரசம்.*

*"பஸ் இருக்காதே இன்னக்கி எப்படி வந்தீங்க" என்று தங்கம்மா கேட்டாள். "நடந்து வந்தேன்கா. 7 மணிக்கே கௌம்புனேன். கொஞ்சதூரம் ஒரு ஆண் சைக்கிள்ல வச்சு கூட்டி வந்தான். மணி பதினொன்னு ஆச்சு.*

*நீங்க ஒன்னும் சமச்சிருக்க மாட்டீங்க என் மக்கமாரு பசியோடு இருப்பாங்க அவுங்க அப்பா இருந்தா பசியோடு இருக்க விடுவாங்களா?. அதனாலதான் எடுத்து வந்தேன் மகன், மருமகள், மகள் எல்லோருக்கும் எடுத்து வைக்கா சாப்பிடட்டும் என்றாள்.*

*தங்கமக்காவுக்கு கண் கலங்கியது "அவர் இருந்திருந்தால் பிள்ளைகளை பசியோடு இருக்க விட்டிருப்பாரா? என் துக்கத்தை நெனச்சேனே தவிர என் பிள்ளைகள் பசியை மறந்துட்டேனே" என்று நினைத்து அழுதாள்.*

*அமராவதியே உள்ளே போய் தட்டு தண்ணீர் எடுத்து வந்து எல்லோருக்கும் வைத்துக் கொடுத்து சாப்பிட வைத்தாள். பேரப் பிள்ளைகளுக்கு முறுக்கு அதிரசம் எடுத்து சாப்பிடக் கொடுத்தாள். பின்பு சாப்பிட்ட பாத்திரங்களைக்*

கழுவி வைத்தாள். வீடு அமைதியாக இருந்தது. வெற்றிலை எடுத்துப் போட்டாள்.

நாலு மணிநேரம் நடந்த களைப்பு சற்று கண் அசந்து விட்டாள். தங்கம்மா ஆச்சரியத்துடன் அமராவதியை பார்த்தபடி படுத்திருந்தாள். நேசம் என்பது ஒருவரிடம் காட்டுவதல்ல. அவர் சார்ந்த அனைவரிடமும் காட்டுவதாகும் என்ற தத்துவத்தை தனக்கு அமராவதி உணர்த்திவிட்டாள். ஐம்பது வயதில் நாலு மணி நேரம் நடந்து வந்து இந்தப் பிள்ளைகளைச் சாப்பிட வைத்தாளே. இவளும் ஒரு தாய் தான் என்று தங்கம்மா நினைத்தாள்.

சட்டென்று கண் விழித்த அமராவதி தூக்குப் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு அழுதபடியே கிளம்பினார். “அப்பா தெய்வமா இருக்காரு ஒன்னும் கலைப்படாதீங்க. தங்கமக்கா புள்ளைகளை நல்லா பார்த்துக்கக்கா” என்றபடி போய் விட்டாள்.

பஸ் இன்னும் விடவில்லை. அவள் தனியாக நடந்து கொண்டிருந்தாள். பொண்ணு பார்த்த அன்னைக்கே அமராவாதிக்கு பரிசம் போட்டாங்க. அவ பொன்னையா வாத்தியாரைத் தான் மாப்புள்ளைன்னு நெனச்சு கல்யாணத்துக்கு சம்மதம் சொன்னாள். தாலி கட்டும்போது பார்த்தால் யாரோ ஒருவர். திடுக் என்றது கெட்டுமேளம் ஒலித்தது. நிமிர்ந்து பார்த்தாள். மாப்பிள்ளை தோழனாக பொன்னையா வாத்தியார் நின்று கொண்டிருந்தார்.

வாழ்க்கை ஓடிவிட்டது. இனி என்ன? கொஞ்ச காலம் அடிக்கடி வந்து பொன்னையா வாத்தியார் பிள்ளைகளைப் பார்க்கணும் பாவம், தங்கம்மா என்று சொல்லியபடி நடந்து கொண்டிருந்தாள்.



## *2. அவிழ்க்கப்பட்ட முடிச்சு*

*தையல் மிஷன் ஓடிகொண்டிருந்தது. பாக்யத்தாய் கண்ணே கலைமானே கன்னி மயிலென கண்டேன் உனை நானே என்று பாடியபடி தைத்துக்கொண்டிருந்தாள். தையல் தைத்தே தன் குடும்பத்தை நடத்தி வந்தாள். அப்போது சந்திரன் வந்தான் அவன் ஒரு லேடிஸ் ஆஸ்டலில் வாட்ச்மேனாக இருந்தான். அங்கு பிள்ளைகள் தரும் ஜாக்கட்களை வாங்கி இங்கு வந்து தைக்க கொடுப்பான்; பின்பு வாங்கி செல்வான்.*

*மூன்று மாதத்துக்கு முன்பு வந்தான். அதில் இருந்து அடிக்கடி வர தொடங்கினான். ஒரு நாள்,*

*“நீங்கள் ரெடிமேடி ஜாக்கட் தைக்கலாமே” என்றான்.*

*“தைக்கலாம்; முதல் போடனுமில்லை” என்றாள்.*

*“நான் வாங்கி வர்றேன்” என்றவன் மறு நாள் ஒரு டஜன் ஜாக்கட் பீஸ்களோடு வந்தான்.*

*மறு நாள் சில சம்கி, கண்ணாடி, லேஸ் போன்றவற்றை வாங்கி வந்தான்.*

*திருமணத்துக்கு பிளவுஸ் தைக்கப்படும் என்று ஒரு போர்டை கொண்டு வந்து மாட்டினான்.*

*தினமும் ஒரு மணிக்கு வருவான். மூன்று மணி வரை இருப்பான். பிறகு போய்விடுவான். அவன் வளர்த்திக்கு கட்டிலில் கால் நீட்டமுடியவில்லை என்று தன் பழைய சேலைகளைக் கொண்டு ஒரு மெத்தை தைத்து போட்டாள்.*

*இன்று வந்தவன் உம்மென்று உட்கார்ந்திருந்தான்.*

*அவள் “என்னாச்சு” என்றாள்.*

*‘‘எனக்கு கல்யாணம் முடிவாயிருச்சு. ஊருல போய் பேசி முடிச்சுட்டாங்க. எனக்கே தெரியாது. வீட்டு மாப்பிள்ளையாம்.’’*

*அவளுக்கு துக்கம் தொண்டையை அடைத்தது. நெஞ்சில் யாரோ சம்மட்டியால் அடித்தது போல வலித்தது. நெஞ்சில் கையை வைத்தாள்.*

*அவன் எழுந்து உள்ளே போய் கட்டிலில் படுத்தான். ஆனால் அவள் போக வில்லை. சிறிது நேரத்தில் அவன் கிளம்பிவிட்டான். அவன் வாசம் அந்த வீடு முழுக்க நிறைந்திருந்தது.*

*மனைவியை இழந்தவன். மறுதிருமணம் செய்ய மாட்டான் என்று நினைத்திருந்தாள். தென்றல் போல வந்தவன் புயல் போல புறப்பட்டுவிட்டான். இடி விழுந்த மரம் போல அவள் மனம் கருகிவிட்டது.*

*இனி யாருக்காக வாழவேண்டும் என்று நினைத்தாள். செத்துவிடலாம் என்று முடிவு செய்தாள். அப்போது அவள் நினைவு பின்னோக்கி சென்றது.*

*தன் கணவன் இறந்த மறுநாள் அழுதுகொண்டிருந்த பாக்கியத்தாயிடம் நெருங்கி வந்த மச்சான்.*

*அழாதே பாக்கியம் நான் இருக்கேன் என்று தோளை தொட்டார்.*

*‘‘நீங்க இருந்து என்ன செய்ய? எனக்கு அவர் மாதிரி வருமா? எங்க அக்கா சாகவும் அத்தானுக்கே என்னை ரெண்டாம் தாரமாக எங்கம்மா கட்டிக் கொடுத்தாங்கள்ல; அது மாதிரி இப்ப அத்தான் செத்துட்டாங்க. அவர் தம்பிக்கு என்ன கல்யாணம் கட்டி வைங்க’’ என்றாள். அவள் மச்சானுக்கு அதிர்ச்சியாகிவிட்டது*

*‘‘அறுதலி முண்ட என்ன சொல்லுதா பாரு. இவளுக்கு பட்டா பய கேக்குதாக்கும்; ஏன் நாங்க பத்தலியோ’’ என்றபடி விருட்டென்று போய்விட்டார். அன்று முதல் புகுந்த வீட்டு சொந்தம் அற்றுப் போய்விட்டது. மூன்று பிள்ளைகளோடு கிடந்து கஷ்டப்பட்டாள்.*

*சந்திரன் வந்ததும் வாழ்வில் வசந்தம் வீசியது போல உணர்ந்தாள். இன்று அவனும் விலகி விட்டான்.*

*இனி எதற்கு வாழவேண்டும் என்று தன்னை தானே கேட்டு கொண்டாள். எங்கேயாவது போய் செத்துவிடலாமா என்று தோன்றியது. இருட்டி விட்டது. யாரோ வாசலில் வந்து கூப்பிடும் சத்தம் கேட்டது. எழுந்து லைட்டை போட்டாள்; வாசலில் மார்த்தாம்மா நின்றிருந்தார்.*

*"தாயி கொஞ்சம் என்னோட துணைக்கு வர்றியா. என்னால தனியா போக முடியல; இன்னைக்கு ஒரு நாளைக்கு கொஞ்சம் என்னோடு வா தாயி" என்றார். மார்த்தாம்மா தினமும் ஆஸ்பத்திரிக்கும் வீடுகளுக்கும் ஊழியத்துக்கு போவார். இவளுக்கும் இன்று வீட்டில் இருக்க பிடிக்கவில்லை. அவருடன் கிளம்பினாள். அன்றில் இருந்து தினமும் மார்த்தாம்மாவுடன் போகத் தொடங்கினாள். இவளுக்கு வேத வாசிப்பு ஜெபம் எதுவும் தெரியாது; மார்த்தாம்மா ஒவ்வொருவருக்கும் ஜெபித்துக்கொண்டே வருவார். இவள் சும்மா வேடிக்கை பார்ப்பாள். அந்த நேரம் சந்திரனை மறந்திருப்பாள்.*

*மார்த்தாம்மாவுடன் போகும்போது இவளுக்கு நல்ல சாப்பாடு கிடைக்கும். பிள்ளைகளுக்கு கொண்டு போய் கொடுக்கும்படி சிலர் திண்பண்டங்களும் சிற்றுண்டியும் கொடுத்து அனுப்புவார்கள். அவளுக்கு அது கொஞ்சம் நிம்மதியாக இருந்தது. மற்றபடி இவள் பிள்ளைகள் மதியம் பள்ளிக்கூடத்திலேயே சத்துணவு சாப்பிட்டுவிடுவார்கள். இவள் தையல் தைப்பதை கூட விட்டுவிட்டாள். சந்திரன் இல்லாத வாழ்க்கை வெறும் வானம் போல இருட்டாக இருந்தது.*

*ஒரு நாள் இவள் காலையில் சோம்பலாக படுத்துக்கிடந்த போது முதல் நாள் ஊழியத்துக்கு போனது நினைவுக்கு வந்தது. "அப்பாடா நமக்கு கடன் தொல்லை இல்ல; நோய் தொந்தரவு இல்லை; நம்ம வீட்டுல எந்த பச்ச பிள்ளையும் சாக பிழைக்க கெடக்கல" என்று நினைத்தாள். சட்டென்று தன் பிள்ளைகளை சில மாதங்களாக கவனிக்கவே இல்லை என்பது அவள் புத்தியில் உறைத்தது.*

*சே, இனி எவனும் வேணாம்; என் பிள்ளைங்க இருக்கும்போது எனக்கு என்ன குறை? என்று சொல்லிக்கொண்டே எழுந்தாள். இயேசு சாமி பாட்டை பாடியபடி தையல் மிஷனுக்கு எண்ணெய் விட்டாள். வீட்டை சுத்தப்படுத்தினாள்; அவள் மனதும் சுத்தமாயிற்று. மீண்டும் தையல் மிஷன் ஓடத் தொடங்கியது.*



# 3. இது யார் குழந்தை?

அந்த அலுவலகத்தில் ஐயா முக்கிய சொற்பொழிவு ஒன்றை தயாரித்துகொண்டிருந்தார். அன்று அவரது செயலாளர் வரவில்லை. அப்போது புதிதாக சேர்ந்திருந்த மினியை அழைத்தார். தன் உரையை டிக்டேட் செய்தார். அவளது அழகான கையெழுத்து அவருக்கு மிகவும் பிடித்தது. எழுதி முடித்ததும் வாசிக்க சொன்னார். சரியாக இருந்தது. அச்சகத்தில் கொடுக்க சொன்னார்.

ஐயா ஒரு சமயப் பேச்சாளர். அவருக்கு அச்சகம் ஒன்றும் இருந்தது. அத்துடன் ‘சமய வெளி’ என்ற பெயரில் பதிப்பகமும் நடத்தினார். நடு வயதைக் கடந்தவர் என்றாலும் அவர் பார்வையிலும் பேச்சிலும் ஒரு கவர்ச்சியும் கண்ணியமும் இருந்தது. அவர் மகளும் மருமகனும் அச்சகத்தைப் பார்த்துக்கொண்டனர். அவர்கள் தன்னிடம் கண்டிப்பாக நடந்துகொண்ட விதம் மினிக்கு பிடிக்கவில்லை.

ஐயாவின் செயலாளர் தன் விடுப்பை சில மாதங்களுக்கு நீட்டித்தார். அப்போது ஐயா மினியை அழைத்து செயலாளர் செய்த வேலைகளை செய்ய சொன்னார். இது அவர் மகளுக்கு பிடிக்கவில்லை.

ஒரு நாள் காலையில் ஐயா, மினி ஒரு மின்னஞ்சல் வந்திருக்கு அதுக்கு பதில் போடனும்; இங்கே வாம்மா என்றார். அந்த வேலை முடிந்தது.

மறு நாள், மினியிடம் “கொஞ்சம் எனக்கு கம்ப்யூட்டர் சொல்லிக்குடும்மா” என்றார்.

பாடம் தொடங்கியது. அவள் பல மணி நேரங்கள் அவர் அருகிலேயே இருந்தாள். அவள் வாசம் அவரை மயக்கியது.

*தினமும் ஏதாவது ஒரு காரணம் சொல்லி அவளை அழைத்து தன் அருகே வைத்துக் கொண்டார். மெல்ல மெல்ல அவளைத் தொட்டு தொட்டு பேச ஆரம்பித்தார். பிறகு அவளை தன் சிஷ்யை என்று சொல்லிக்கொண்டு வெளியூர் கூட்டங்களுக்கு அழைத்து போனார். வயது வித்தியாசம் அதிகம் என்பதால் யாரும் அவரை சந்தேகப்படவில்லை. ஆனால் அவருக்குள் கொடூர காமக் கிறுக்கன் சிரித்துக்கொண்டிருந்தான்.*

*ஒரு நாள் மினி அவரிடம் வந்து "ஒங்க மருமகன் பார்வையே சரியில்லை" என்றாள். வந்தது கோபம் அவருக்கு. மருமகனை கூப்பிட்டு காட்டு கத்தல் கத்தினார். "ஒழுங்கா இரு அல்லது வெளிய போ" என்றார். அவர் அமைதியாக நின்றுவிட்டு மனைவியோடு போயே போய்விட்டார்..*

*ஐயா மினியின் கையாலாகாத கணவனிடம் அச்சகப் பொறுப்பை கொடுத்தார். அச்சகம் பழைய பெருங்காய டப்பாவைப் போல செயல்பட்டது.*

*திடீர் திடீரென்று அவர் அலுவலகத்துக்கு சில மருத்துவர்கள் வந்து போயினர். ஐயா, ஆயிரம் ஆயிரமாக அவர்களுக்கு அள்ளிக்கொடுத்தார்.*

*இப்போது அவர் தம் கூட்டங்களில் மருத்துவம், ஆரோக்கியம் நூறாண்டுகள் வாழ்தல் பற்றி பேச தொடங்கினார். தலைக்கு 'டை' அடித்து தன் தோற்றத்தை இளமையாக்கினார். எப்போதும் உற்சாகமாக காணப்பட்டார். அவர் மகள் இருந்த வீட்டில் மினியையும் அவள் கணவனையும் குடி வைத்தார்.*

*மினி இப்போது அதிகாரத்தில் மேக்சிமம் ஆகிவிட்டாள். அந்த அலுவலகத்திலும் பதிப்பகத்திலும் அவள் அதிகாரம் கொடி கட்டி பறந்தது.*

*அவர்கள் குழந்தைக்காக ஃபெர்டிலிட்டி கிளினிக்குகளுக்கு அலைந்தனர். ஐயாவோ லேகியங்களுக்காக பணத்தை வாரியிறைத்தார். "எனக்கொரு மகன் பிறப்பான்" என்று அவ்வப்போது மனதுக்குள் உற்சாகமாகப் பாடிக்கொண்டார்.*

ஒரு நாள் மினிக்குக் குழந்தை பிறந்தது. ஆசையாக ஐயா அவளைப் பார்க்கப் போனார். குழந்தைக்கு இரு காலும் சூம்பியிருந்ததை பார்த்து முகம் சுளித்தபடி "இது யார் குழந்தை" என்றார். சுறீர் என்றது மினிக்கு. "என் முகத்தில முழிக்காதீங்க. வெளியே போங்க" என்று கத்தினாள். அவள் கணவன் மனைவிக்கு வேண்டிய பொருட்களோடு அறைக்குள் நுழைந்தான்.



# 4. ஒரு இங்கிலீஷ் கனவு ஒரு தமிழ் கனவு

*அக்கா என்ன செய்றீங்க; பாப்பா என்ன செய்றா;*

*சத்தம் கேட்டு வேக வேகமாக ராதாமணி ஓடி வந்தாள். வாசலில் கிடந்த ஸ்க்ரீனை விலக்கி வெளியே வந்து அங்கு நின்றிருந்த தன் பக்கத்து வீட்டு பார்வதியைஉள்ளே வா என்று சொல்லாமல் 'உட்காருங்க என்ன விஷயம்' என்று திண்ணையிலேயே அமர்த்தி விட்டாள்.*

*உள்ள பாப்பா படிச்சுட்டிருக்கா; நம்ம இங்கேயே உட்கார்ந்து பேசுவோம். அவளுக்கு நாளைக்கு மேத்ஸ்டெஸ்ட். கணக்கெல்லாம் ரொம்ப கஷ்டமா இருக்கு. இன்னைக்கு தான் டியூஷன்-ல மிஸ் அவளுக்கு சொல்லிக் கொடுத்தாங்க வீட்ல போய் 'நீயா போட்டு பாரு'ண்ணாங்க. அதான் போட்டு பார்த்துட்டு இருக்காள்,என்றாள்.*

*பார்வதி தன் குடும்பக் கதையை ஆரம்பித்தாள். மாமியார் கொடுமையை சொன்னாள். "நாலு விறகு குச்சியை குடுத்துட்டு இன்னைக்கு போயிருச்சுக்கா நான் அதை வச்சு சோறு ஆக்க என்ன பாடுபட்டேன் தெரியுமா, எருவாட்டியும் ஈரம். ஊதி ஊதி என் நெஞ்சே வலிக்குது" என்றாள். விறகடுப்பு கொஞ்சம் சிரமம் தான் என்று ஆறுதல் சொல்லிய ராதாமணிக்கு இப்படி கதை பேசினால் பாப்பா படிப்பு கேட்டுப்போயிடுமே என்று கவலையாக இருந்தது. பார்வதியை பார்க்க மிகவும் சங்கடமாக இருந்தது.*

*"அய்யோ எப்படி சமாதானப்படுத்தி அனுப்புறது. இவள் தன் மாமியாரைப் பற்றி புலம்பிக்கொண்டே இருப்பாள். உள்ள பாப்பா படித்துக்கொண்டு இருக்கிறாள் இவள் பேச்சு அவள் காதில் விழுந்தது என்றால் அவள் கவனம் இங்கு வந்து விடும். பிறகு கணக்கில் 'கேர் லெஸ் மிஸ்டேக்' விடுவாள்.*

இன்னைக்கு மிஸ் சொன்னாங்க ''உங்க பாப்பா நல்லா படிக்கிறாள். ஆனால் கேர் லெஸ் மிஸ்டேக்'' விடுறான்னு சொன்னாங்க. அங்கேயே இரண்டு கொட்டுகொட்டி இருப்பேன். ஆனா அன்னைக்கு மிஸ் சொல்லிட்டாங்க. எங்க முன்னாடி நீங்க விஜயாவைத் தண்டிக்கக்கூடாது. நீங்க வீட்ல போயி தான் உங்க மகள கண்டிக்கணும். எங்க முன்னாடி கண்டிச்சா அது எங்களுக்கு மரியாதை இல்லாமல் போகும்னு சொல்லிட்டாங்க. அதனால இன்னைக்கு அவளுக்கு மண்டையில கொட்டல.

''நல்லா படிக்கிறா. ஆனால் ஏன் தான் இப்படி கேர் லெஸ் மிஸ்டேக்விடுறாளோ என்ன செய்றது, எவ்வளவு கஷ்டப்பட்டு நான் படிக்க வைக்கிறேன்'' என்று தன் மனதிற்குள் புலம்பிக்கொண்டே பார்வதியின் பேச்சுக்கு தலையை ஆட்டிக்கொண்டிருந்தாள். சற்று நேரத்தில் பார்வதியின் பேச்சு ஓய்ந்து விட்டு 'சரி வரேன்க்கா. பாப்பா படிக்குதாக்கும்; சரி வரேன்' என்று சொல்லிவிட்டு அவள் மனதில் இருந்த பாரத்தை எல்லாம் கொட்டிய நிம்மதியில் கிளம்பிவிட்டாள்.

ராதாமணி உள்ளே வந்தாள். மகளின் மண்டையில் நறுக்கென்று ஒரு கொட்டு வைத்தாள். என்னவென்றே புரியாமல் பயந்து போயி அந்த சிறுமி நிமிர்ந்து பார்த்தாள். அவள் கண்கள் கலங்கி அச்சத்துடன் அண்ணாந்து பார்த்தால் அவள் கவனமாக கணக்கு போட்டுக் கொண்டிருந்தபோது தலையில் நங்கென்று ஒரு குட்டு விழுந்தால் எப்படி அதிர்ச்சியாக இருக்கும்.

பாவம் அந்த சிறுமி, அடிக்கடி இப்படி அவள் அம்மாவிடம் இருந்து டம் டம் என்று அடியோ நங்கு நங்கு என்று கொட்டோ விழும். இது சகஜம்.

'ஒழுங்கா படி நாளைக்கு டெஸ்ட்ல நல்ல மார்க் வாங்கனும், இல்ல பிச்சுப்புடுவேன் பிச்சு' என்று சொல்லியபடி ராதாமணி பாத்திரம் விளக்க போய்விட்டாள்.

''எதுக்குத்தான் இந்த இங்கிலீஷ் மீடியத்துல படிக்க வச்சாங்களோ. என்ன அடிச்சு கொல்றாங்க. நான் நல்லா தான் படிக்கிறேன். ஆனால் எப்படியோ கணக்குல மட்டும்

மிஸ்டேக் விழுது. மிஸ் எல்லாம் என்னைச் செல்லமா வச்சிக்கிறாங்க ஆனா அம்மா தான் அடிச்சு கொல்றாங்க. அம்மா காலையில எந்திருச்சு படின்னு சொல்றதுக்குள்ள நானும் பைக்கட்டை கீழே எடுத்து வச்சு படிக்க உட்கார்ந்துடனும்னு நினைக்கிறேன். ஆனால் நான் கண்ணு முழிக்கும்போது அல்லது அம்மா என்னை எழுப்பும் போது எந்திருச்சு பையை எடுத்து வச்சு படின்னு சொல்லித்தான் எழுப்புவாங்க, பாடம் எல்லாம் ஈஸியா தான் இருக்கு. எங்கம்மா அடியை நெனச்சா தான் பயமா இருக்கு''.

'என்ன படிக்கிறியா கனவு கண்டுக்கிட்டு இருக்கியா' என்று கேட்டபடி ராதாமணி மகள் அருகே வந்து உட்கார்ந்தாள். விஜயா கணக்கு நோட்டை பையில் வைத்துவிட்டு சயின்ஸ் பாடம் எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள். அவள் சயின்ஸ் பாடத்தை மெதுவாக படித்ததும் அவள் அம்மா ''என்ன முணுமுணுக்கிற. வாயை திறந்து படி, வாய்க்குள்ளேயே முணுமுணுக்கிறா. சத்தமா வாயை திறந்து படிச்சா தானே பாடம் மனசுல தங்கும். மிஸ் என்ன சொன்னாங்க. கொஸ்டியன் ஒரு தடவை ஆன்சர் மூணு தடவை வாசிக்கணும்னு சொன்னாங்கள்ல. சத்தமா படி'' என்று சொல்லியபடி அரிவாள்மனையை எடுத்து கொண்டு வந்து உட்கார்ந்து காய் நறுக்கத் தொடங்கினாள்.

விஜயா சயின்ஸ் பாடத்தை சத்தமாக படித்தாள் ஒவ்வொரு கேள்வியையும் ஒரு முறை வாசித்து அதற்கு உண்டான பதிலை மூன்று முறை வாசித்தாள். ஹார்ட் வர்ட்சுக்கு ஸ்பெல்லிங் படி என்றாள் ராதாமணி. அம்மாவுக்கு ஸ்பெல்லிங் மிஸ்டேக் வரக் கூடாது. வந்தால் அதுக்கும் அடி விழும் ஒழுங்காக படி என்று அதட்டி சொன்னாள். விஜயா சரிம்மா என்று சொல்லிவிட்டு ஒவ்வொரு பதிலிலும் இருக்கும் புதிய வார்த்தைகளை ஸ்பெல்லிங் சொல்லி ஐந்து முறை படித்தாள். விஜயாவுக்கு ஸ்கூலில் ஒரு மிஸ்; வீட்டில் ஒரு மிஸ்.

மகள் படுத்து தூங்கியதும் ராதாமணிக்கு கொஞ்சம் கவலையாக இருந்தது. 'எதுக்கு பிள்ளையை கொட்டுனேன். அதுபாட்டுக்கு படிச்சுக்கிட்டு தான் இருந்துச்சு தலைல கொட்டின இடம் புடைச்சி இருக்குமோ' என்று நினைத்தபடி

உச்சந்தலையை தடவிப் பார்த்தாள். லேசாக புடைத்த மாதிரி தெரிந்தது வலித்ததாலோ என்னவோ விஜயா முனங்கிக் கொண்டே திரும்பிப் படுத்தாள். ராதாமணிக்கு பழைய நினைவுகள் வந்தன.

அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி; விஜயாவ பள்ளிகூடத்துல சேக்குறதுக்கு அந்த வீட்டுக்குப் பக்கத்துல இருக்குற ரைட்டர் கிட்ட போய் கேட்டேன். ரைட்டர்னு சொல்லவும் போலீஸ் ஸ்டேஷன்ல ரைட்டர் வேலை பார்க்கிறவருன்னு நினைச்சேன்; எங்க மாமா மகன் அப்படித்தான். அவரை கட்டியிருந்தால் இந்த நிலைமை வந்திருக்குமா. சொந்தக்கார பாவிக என் பிழைப்புல மண்ணை அள்ளி போட்டுட்டானுங்க. இந்த மனுசனோட ஒடி வந்து இவரும் அற்ப ஆயுசுல போய் நான் ஒத்தப் பிள்ளையை வச்சுக்கிட்டு கண்ணகி படாத கஷ்டமும் துரோபதை படாத துன்பமும் படுறேன். என் பிள்ளையாவது படிச்சு நல்ல வேலைக்கு போய் நல்ல பிழைப்பு பிழைக்கணும்னு பக்கத்துல இருக்குற ஓசி பள்ளிக்கூடத்துள படிக்க வைக்க ரைட்டர் வீட்டுக்கு போனேன். இவர் ரயில்வே ஸ்டேஷன்ல ரைட்டர் வேலை பார்க்குறவராம், சரி யாரா இருந்தால் நமக்கென்னனு, அவர்கிட்ட போயி பாப்பாவ ஸ்கூல்ல சேர்க்கணும்னு சொன்னேன் அங்க பக்கத்துல ஒரு பெரிய ஸ்கூல் இருக்கு அங்கதான் சேர்க்கணும்னு சொல்லி அவர்கிட்ட போய் கேட்டேன். அவரும் சரின்னு சொல்லி மறுநாள் ஸ்கூலுக்கு வாம்மான்னு சொன்னாறு.

விஜயாவை கூட்டிட்டு மறுநாள் ஓசி பள்ளிகூடத்துக்கு போனேன். ஒரு பாரம் வாங்கிட்டு வந்து ஃபில் அப் பண்ணி கொடுத்தாரு. என் கிட்ட கையெழுத்து வாங்கினார். பாப்பாவ கூட்டிகிட்டு ஹெட் மாஸ்டரம்மாவை பார்க்க போனார். அவுங்களுக்கு எங்க பாப்பாவை பிடிச்சிருச்சு. சரின்னுட்டு இடம் கொடுத்துட்டாங்க. ஏழு றுவா ஃபீஸ் கட்டனும்னு சொன்னாரு. ஏழு ருபாய்க்கு நான் எங்கே போவேன். என் கையில ஒரு ரூபாய் தான் இருக்கு. அது ஓசி பள்ளிக்கூடம் தானே எதுக்கு ஃபீஸ்-னு கேட்டேன். அதுக்கு அவரு ஏம்மா இது ஓசி பள்ளிக்கூடமா இது இங்கிலீஷ் பள்ளிக்கூடமா-ன்னாரு, எனக்கு பகீர்னு இருந்துச்சு சரிங்கய்யா ஒரு வாரம் டயம் கேளுங்க கட்டுவோம்ன்னு சொன்னேன் வீட்டுக்கு

வந்துட்டோம். எப்படி பீஸ் கட்டுவேன் எனக்கு என்ன தெரியும். இந்த பிள்ளை இங்கிலீஷ் எப்படி படிக்கும். எனக்கு ஒரே கவலையா இருக்கு. நான் அந்த ஒரு வாரமும் அழுதேன் கும்பிடாத சாமி இல்லை கல்லை கண்ட இடமெல்லாம் சாமின்னு கையெடுத்து கும்பிட்டேன் எம் பிள்ளை நல்லா படிக்கணும் சாமின்னு கும்பிட்டேன்.

என்ன எங்க அம்மா ஏழு வரைக்கும் தான் படிக்க வச்சாங்க. எட்டு படிச்சிருந்தா இன்னைக்கு நான் டீச்சர் ஆகி இருப்பேன். ஆனால் ஏழு படிக்கவும் நான் வயசுக்கு வந்து விட்டேன். எங்க அம்மா தன் அண்ணன் மகனுக்கு கட்டி வைக்கனும்னு நிப்பாட்டிடுச்சு, இப்ப பாருங்க எம்புட்டு கஷ்டப்படுறேன் விஜயாவையாவது நல்லா படிக்க வைக்கனும்னு நெனச்சேன் ஆனா இங்கிலீஷ் மீடியம்னு சொல்றாரு அன்னைக்கு அழுதுகிட்டே தூங்கிவிட்டேன். மறுநாள் எப்படியோ நான் வேலை பாக்கிற இடத்தில கொஞ்சம் கொஞ்சமா காசு புரட்டி ரெண்டு மூணு நாலு அஞ்சு ரூபாய் சேத்துட்டேன். இன்னும் ரெண்டு ரூபா வேண்டுமே என்ன செய்ய. ஒண்ணுமே புரியல வழியில் ஒரு நாள் அந்த பள்ளி கூடத்துல பார்த்த ஒரு டீச்சரம்மாவை பார்த்தேன், அவங்க கிட்ட போயி ‘டீச்சர்டீச்சர் நீங்க அந்த இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் தான் வேலை பார்க்கிறிங்க. அங்க என் மகளை சேர்க்க போறேன் ஏழு ரூபாய் பீஸ் சொன்னாங்க. அஞ்சு ரூபாய் சேர்த்துட்டேன், இன்னும் இரண்டு ரூபாய் சேர்க்கணும். வருகிற திங்கட்கிழமை பீஸ் கட்டணும் இன்னும் ஒரு ரெண்டு நாள் டைம் கேட்டா தருவாங்களான்னு’ கேட்டேன். அதுக்கு அந்த டீச்சர் ‘நான் ரெண்டு ரூபாய் தரேன்; நீங்க திங்கட்கிழமை வந்து பீஸ் கட்டிடுங்கன்னு சொன்னாங்க. எனக்கு ஒரே ஆச்சர்யம்.

திங்கட்கிழமை என் மகளை கூட்டிகிட்டு நான் போனப்ப தான் அந்த டீச்சர் பெயர் கேட்கலையே. அவுங்களை இந்த பள்ளிக்கூடத்துல எப்படி கண்டுபிடிப்போம். ஒண்ணுமே புரியல. அங்க போயி அந்த பீஸ் கட்டுற ஆபீஸ் கிட்ட நின்னேன் பெறகு அந்த பள்ளிகூடத்தையே சுத்தி சுத்தி நடந்து வந்தேன். திடீர்னு யாரோ கூப்பிட்ட சத்தம் கேட்டு திரும்பி பார்த்தேன் அந்த டீச்சர் தான் சிரிச்சுகிட்டு நின்னுக்கிட்டிருந்தாங்க. கிட்ட போனேன் ‘டீச்சர் உங்க பேர் கேட்கலையா உங்கள தேடி நான் சுத்தி சுத்தி

*நடந்து கிட்டே இருக்கேன்னேன். டீச்சர் சிரிச்சபடி அவங்க கையில இருந்த ஒரு அழகான பர்சை திறந்து பணம் எடுத்துக் கொடுத்தாங்க நான் அவங்ககிட்ட ஒரு நன்றி கூட சொல்லல விஜயா கையை பிடிச்சு கூட்டிட்டு ஓடிவந்து சட்டுன்னு பணத்தைக் கட்டி ரசீது வாங்கினேன். இன்னொரு இடத்துல போய் கொஞ்சம் இங்கிலிஸ் புஸ்தகம் கொடுத்தாங்க. அந்த ரெண்டு மூணு இங்கிலீஷ் புஸ்தகத்தையும் வாங்கிக் கிட்டு போய்த் திரும்ப அந்த டீச்சரை அவங்க கூப்பி ட இடத்துக்கு போய் பார்த்தேன். அவங்ககிட்ட அப்போதே நன்றி சொல்லிட்டு பாப்பாவ காமிச்சுட்டு அவங்க பேரு ஆனந்திடீச்சர்னு கேட்டுகிட்டு வந்தேன்.*

*அதுல இருந்து ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு நாளும் அந்த ஆனந்தி டீச்சர் தான் எனக்கு தெய்வம். எங்க பாப்பா எந்த கிளாஸ்ல படிச்சாலும் அங்க சாய்ந்திரம் ஹோம் ஒர்க் கணக்கு போடுறது, மறுநாள்டெஸ்ட்டுக்கு உண்டான பாடம் படிக்கிறது என இரண்டையும் படிக்க வச்சிடுவாங்க. மற்ற பாடம் எல்லாம் வீட்ல போய் எழுதிக்கோ. அன்னன்னைக்கு பாடத்தை அன்னனைக்கு படிச்சுடனும்; பெண்டிங் வைக்கக்கூடாது; அப்புறம் பாடம் சேர்ந்துரும்; கடைசி படிக்க முடியாது; கடைசி நேரத்தில் படிக்கக்கூடாது; இன்னும் நிறைய புத்தி சொல்லுவாங்க அவளுக்கு மட்டுமா எனக்கும் அம்புட்டு புத்தி சொல்லுவாங்க பொறுமையா இருக்கணும் விஜயாம்மா நீங்க கோபப்படக்கூடாது. விஜயா நல்லா படிச்சு வருவா; நீங்க நல்ல நம்பிக்கையோட இருங்க; தைரியமா இருங்க; உங்களுக்கு என்ன கஷ்டம்னாலும் என் கிட்ட கேளுங்க; நாங்க எல்லாரும் உங்களுக்கு உதவி செய்கிறோம்; அப்படின்னு கூட இருக்க டீச்சர் எல்லாம் சேர்த்துக்குவாங்க; இப்ப கொஞ்சம் கஷ்டப்பட்டாலும் பின்னாடி நல்லா இருக்கலாம் என்று விஜயா கிட்ட அடிக்கடி சொல்லுவேன். அப்படி சொல்லி சொல்லி தான் அவளை நல்லா படிக்க வெச்சுகிட்டு இருக்கேன் என்று யாரிடமோ சொல்வது போல அவள் தனக்குத்தானே புலம்பியபடி ராதாமணி தூங்கிவிட்டாள்.*

*இன்று விஜயா பள்ளிப்படிப்பு முடித்து நல்ல மார்க் எடுத்து பாஸ் ஆகி காலேஜுக்கு அப்ளிகேஷன் போட்டுவிட்டு வந்திருக்கிறாள். இங்கிலீஷ் லிட்ரேச்சர் படிக்கணும்னு அவளுக்கு ஆசை; ஆனால் அந்த காலேஜ்ல*

அவளுக்கு இங்கிலீஷ் லிட்ரேச்சர் குடுக்க மாட்டேன்னு சொல்லிட்டாங்க, அவள் சயின்ஸ் குரூப் எடுத்ததுனால அவளுக்கு பிஎஸ்சி சயின்ஸ் தான் கிடைக்கும்னு சொல்லிட்டாங்க. விஜயாவுக்கு சயின்ஸ் பிடிக்காது அவளுக்கு லிட்ரேச்சர் படிக்கணும். கவிதை கதை எல்லாம் நல்லா எழுதுவாள். சயின்ஸ் பிடிக்காவிட்டாலும், அதில் நல்ல மார்க் வாங்கியிருந்தாள். இவ மாட்டேன்னு சொல்லிட்டு வீட்டுக்கு வந்து விட்டான்.

அழுதுகிட்டே அம்மா கிட்ட சொன்னாள்.

‘இப்ப என்ன செய்யப் போற விஜயா’

நான் சயின்ஸ் படிக்க மாட்டேன் எனக்கு அது பிடிக்கல பிடிக்கல. என் பிரெண்ட்ஸ் எல்லாம் இங்கிலீஷ் லிட்ரேச்சர் தான் படிக்குறாங்க நான் இங்கிலீஷ் தான் படிப்பேன்.

ராதாமணி கோயில் கோயிலாகப் போய் கும்பிட்டாள் ஆனந்தி டீச்சரிடம் போன் போட்டு கேட்டாள். அவர்கள் தனக்கு தெரிந்த ஒரு லெக்சரரைப் போய் பார்க்கச் சொன்னார்கள். அந்தம்மாவும் ‘இங்கிலீஷ் லிட்ரேச்சர் குரூப்பில் இடம் இல்லை’ என்று சொல்லிவிட்டார்கள் வேறு காலேஜ்க்கு போகலாம் என்றால் பக்கத்தில் எந்தக் காலேஜும் கிடையாது. இந்த காலேஜ் தான் வீட்டுக்கு அருகில் நடக்கிற தூரத்திலிருக்கும். இன்னொரு லேடிஸ் காலேஜுக்கு பஸ் ஏறி போவது என்பது நினைத்துப் பார்க்க முடியாத காரியம்.

விஜயாவின் படிப்பை நிறுத்தி விடலாமா என்று ராதாமணி யோசித்தாள். போதும் படித்தது தன் உறவினர் பக்கம் தேடி ஒரு நல்ல மாப்பிள்ளை பார்த்து அவளுக்கு கல்யாணம் செய்து வைத்து விட வேண்டும் என்று நினைத்தாள். தன் பெரியம்மா மகளை வரச்சொல்லி அவள் அண்ணன் மகனுக்கு விஜயாவை திருமணம் செய்து தர விரும்புவதாக சொன்னாள். இருவரும் விஜயாவின் ஜாதகத்தை எடுத்துக்கொண்டு ஜோசியரைப் பார்க்க கிளம்பினர், இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த விஜயா உண்மையிலேயே பயந்து விட்டாள்.

“ஐயய்யோ கல்யாணமா. இவ்வளவு காலம் என்னை படி படி படி என்று உயிரை எடுத்து விட்டு இப்பொழுது எவ்வளவு லேசாக கல்யாணம் என்று சொல்கிறார்கள் நான் இவ்வளவு காலம் அடி வாங்கியும் கொட்டு வாங்கியும் கஷ்டப்பட்டு படிச்சு என்ன பலன். நான் விடும் ஒவ்வொரு சுவாசக் காற்றும் படிப்பு படிப்பு என்று நினைத்து நான் படித்ததெல்லாம் வீணாகிவிடுமே. தெய்வமே உனக்கு இரக்கம் இல்லையா. எனக்கு ஒரு இங்கிலீஸ் லிட்ரேச்சர் சீட் வாங்கித் தரக் கூடாதா” என்று அவளும் தன் நிலைக்காக அழுதாள். தன் விதியை நினைத்துநொந்து கொண்டாள்.

அம்மாவும் பெரியம்மாவும் ஜோசியரை பார்க்க கிளம்பியதும் இவள் மீண்டும் அந்தக் காலேஜுக்கு போனாள். போய் ஆனந்தி டீச்சர் சொன்ன லெக்சரரைப் போய் பார்த்தாள். அந்த லெக்சரரிடம் “எனக்கு ஏதாவது ஒரு சீட்டு வாங்கி குடுங்க மேடம். எங்க வீட்டில எங்க அம்மா என்ன கல்யாணம் பண்ணிக் கொடுக்கணும்னு நினைக்கிறாங்க. எனக்கு படிக்கணும்னு ஆசையா இருக்கு” என்று கெஞ்சிக் கேட்டாள். அந்தம்மா தமிழ் டிபார்ட்மெண்ட் என்பதால் அவர் உனக்கு லிட்ரேச்சர் படிக்க ஆசையாக இருந்தால் தமிழ் இலக்கியம் படிக்கலாமே என்றார் விஜயாவும் டக்கென்று சரி என்று சொல்லி விட்டாள். அப்போது அவளுக்கு தெரியவில்லை தான் புலி வாயிலிருந்து தப்பி கரடிவாயில் மாட்டிக்கொள்கிறோம் என்பதை.

வீட்டுக்கு வந்ததும் முகம் கால் கை கழுவி விட்டு காபி போட்டுக் குடித்துவிட்டு நல்ல பிள்ளை போல உட்கார்ந்து விட்டாள். அம்மாவும் பெரியம்மாவும் சோர்ந்து போய் வந்தனர். “சரி நான் கிளம்புறேன். நீ ஒன்னும் மனசை போட்டு குழப்பிக்காத” என்று சொல்லியபடி காப்பி கூட குடிக்காமல் பெரியம்மா கிளம்பிவிட்டார். ராதா மகளைப் பார்த்தாள் ‘என்னம்மா என்ன செய்ற’ என்று கேட்டாள். விஜயா சற்று தெம்புடன் இவர்கள் போன காரியம் ஒன்றும் பலிக்கவில்லை போலும் என்ற நம்பிக்கையுடன் அம்மா காலேஜுக்கு திரும்பப் போனேன் ஆனந்தி டீச்சர் சொன்ன மேடத்தை போய் பார்த்தேன். அவங்க ஏதாவது ஒரு சீட்டு வாங்கி தரேன் வான்னு சொன்னாங்க என்ன கோர்ஸ் சீட்

*வாங்கிக் கொடுத்தாலும் படிப்பியான்னு கேட்டாங்க. நான் சரின்னு சொல்லிட்டேன்.*

*சிறிது நேரம் ராதாமணி அமைதியாக இருந்தாள்.*

*என்ன பீஸ் கட்டணும்*

*150 ரூபாய் விஜயா.*

*அன்னைக்கு பி எஸ் சிக்கு 400 ரூபாய்னு சொன்ன. இப்ப நீ 150னு சொல்றே.*

*தெரியலம்மா அந்த மேடம் அவ்வளவு தான் சொன்னாங்க*

*என்ன கோர்ஸில் சேர போற என்று கோபமாக மகளிடம் கேட்டாள்.*

*"தெரியலம்மா அவங்க எந்த கோர்ஸ்ல இடம் இருக்கோ அதுல சேர்த்து விடுறேன்னு சொன்னாங்க. ₹150 கொண்டு வான்னு சொன்னாங்க" என்று விஜயா பட்டும்படாமல் தன் தாயாரிடம் தெரிவித்தார். எங்கே ஒருவேளை தமிழ் லிட்ரேச்சர் என்று சொன்னால் அம்மா படிக்க விட மாட்டாளோ என்ற ஒரு பயம் அவள் மனதில் இருந்தது.*

*ஆரம்பத்தில் இங்கிலீஷ் மீடியத்தில் சேர்ந்ததற்கு வருத்தப்பட்டதாகச் சொன்ன அம்மா பின்பு போகப் போக தான் இங்கிலீஷ் படிக்கும் போது மட்டுமே தன் அருகில் உட்கார்ந்து அதை சந்தோஷமாக கேட்டுக்கொண்டிருப்பார். தமிழ் படிக்கத் தொடங்கினால் ஏன் இப்படி கத்துற மனசுக்குள்ள படி என்று சத்தம் போடுவார் இப்போது தமிழ் லிட்ரேச்சர் படிக்க போகிறேன் என்று சொன்னால் ஒருவேளை வேண்டாம் என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது என்ற எண்ணத்தில் விஜயா அதைப் பற்றி மூச்சு விடவில்லை.*

*பொழுது விடிந்தது ராதாமணி 150 ரூபாய் எடுத்து மகள் கையில் கொடுத்தாள். ஒரு பக்கம் பீஸ் கம்மி என்பது மகிழ்ச்சியாக இருந்தாலும் இன்னொரு பக்கம் என்ன கோர்ஸ்*

படிக்க போகிறாளோ என்ற ஒரு தயக்கமும் இருந்தது. ஆனந்தி மிஸ் வேறு இப்போது இங்கே இல்லை அவர்கள் தன் தம்பி வீட்டுக்கு சென்னைக்குப் போய் விட்டார்கள் இல்லையென்றால் அவுங்களை போய் பார்த்து வந்திருக்கலாம் சரி விதிப்படி நடக்கட்டும் இம்புட்டு கஷ்டப்பட்டும் பலனில்லாம போச்சே என்று மனதுக்குள் புலம்பிக் கொண்டே இருந்தாள். விஜயா தமிழ் லிட்ரேச்சர் சேர்ந்துவிட்டு மகிழ்ச்சியோடு திரும்பி வந்தாள்.

வீட்டுக்குள் வெறுந்தரையில் படுத்திருந்த ராதாமணி மகள் வந்ததைப் பார்த்ததும் எழுந்து உட்கார்ந்து "என்ன கோர்ஸ்லமா சேர்ந்த" என்று கேட்டாள். அந்த மேடம் தமிழ்ல மட்டும் தான் இடம் இருக்குன்னு சொல்லி அதுல சேர்த்துவிட்டாங்கம்மா என்றாள். உன் தலை எழுத்துப்படி நடக்கட்டும் என்று சொல்லிவிட்டு திரும்பவும் தரையில் அமைதியாக படுத்து விட்டாள்.

விஜயா உள்ளே போய் சோறு போட்டு சாப்பிட்டாள். அவளுக்கு அம்மா லேசாக விசும்புவது போலவும் அழுவது போலவும் மூக்கை உறிஞ்சுவது போலவும் இருந்தது. என்ன செய்வது தன் தலையெழுத்து என்று விஜயா அதை கண்டும் காணாதது போல் இருந்து விட்டாள்.

தொடர்ந்து ராதாமணி விஜயாவை படிக்கவைக்க விரும்பாமல் மாப்பிள்ளை பார்த்துக் கொண்டே இருந்தாள். விஜயா தமிழ் படிப்பது அவளுக்கு எட்டிக்காயாக கசந்தது. கொஞ்சம் கூட பிடிக்க வில்லை. விஜயா புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தால் அவளுக்கு கோபமும் ஆத்திரமுமாக வந்தது. தன்னுடைய 12 வருட உழைப்பு வீணாகி விட்டதே, ஆசையும் இலட்சியமும் பாழாகிவிட்டதே என்று அவளுக்குள் தான் வாழ்ந்த வாழ்க்கையை நினைத்து வெறுப்பாக இருந்தது.

இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் படிக்கும் மகள் படித்த குடும்பத்து பிள்ளைகளைப் போல சுத்தமாக உடை உடுத்த வேண்டும்; தினமும் தலைக்கு எண்ணெய் தடவி சீவி விட வேண்டும்; தலையில் பூ வைத்து முகத்துக்கு மஞ்சள் பூசி லட்சணமாக பிள்ளையை பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப வேண்டும்; தானும் பள்ளிக்கூடத்துக்கு போகும்போது

நீட்டாகப் போகணும், என்று ஒவ்வொரு நிமிடமும் அந்த இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தை மனதில் வைத்தே தன்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு அடியையும் எடுத்து வைத்தாள்.

தினமும் மூன்று வேளை இங்கிலீஷ் பள்ளிக்கூடத்துக்கு தன் மகளுடன் போவாள். காலையில் கொண்டு போய் பிள்ளையை விட்டு விட்டு வந்து அவசர அவசரமாக சோறாக்கி மத்தியானம் கொண்டுபோய் பிள்ளையை சாப்பிட வைத்து தலை முடியை ஒதுக்கி விட்டு முகத்தை கழுவி லேசாக பவுடர் பூசி பிள்ளையை பிரஷ்ஷாக அனுப்புவாள். மீண்டும் சாயங்காலம் பள்ளிக்கூடம் விடும் போது அங்கு போய் அவள் கிளாஸ் டீச்சறிடமும் மற்றவர்களிடமும் பாப்பா எப்படி படிக்கிறாள் என்று கேட்டு வழிநெடுக மகளைத் திட்டிக் கொண்டே வருவாள் வீட்டுக்குள் வந்ததும் இரண்டு நிமிடம் கூட ஓய்வு கொடுக்காமல் துணி மாத்திட்டு உட்கார்ந்து படி. மிஸ் என்ன சொன்னாங்க, கேட்டேல்ல; ஏன் இப்படி இருக்க, நீ ஒழுங்கா படிக்க மாட்டியா; நீ படிச்சா தானே நாளைக்கு நல்லா இருக்கலாம்; உனக்கு தானே சொல்றேன் என்று அவளை திட்டியபடியே அவளை படிக்க வைப்பாள். அவள் படிக்கும் போது வீட்டிற்குள் எந்த ஆளையும் விட மாட்டாள் குடுகுடுவென்று வாசலுக்கு ஓடிப்போய் வெளி திண்ணையிலேயே உட்கார்ந்து பேச வைத்து அனுப்பிவிடுவாள்; பேச்சை வளர்க்கவும் மாட்டாள் பேச்சு பேச்சாக இருந்தாலும் அவள் நினைவெல்லாம் உள்ளே படிக்கும் மகளுக்கு படிப்பில் கவனம் சிதறிவிடக்கூடாது என்ற எண்ணம் தான் இருக்கும்; முடிந்தவரை சுருக்கமாக பேசி வந்தவர்களை அனுப்பிவிட்டு லேசாக கதவை சாத்து சாத்தி வைத்தபடி உள்ளே வந்து வீட்டு வேலைகளையும் செய்து கொண்டிருப்பாள்.

இடையிடையே இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் ஏதேனும் தர்ம காரியங்களுக்கு காசு கேட்பார்கள்; ஏதேனும் போட்டி வைக்க போவதாக சொல்லி காசு கேட்பார்கள் இந்த திடீர் செலவுகள் எல்லாம் சமாளிக்க அவள் மிகவும் சிரமப்பட்டாள் இருந்தாலும் மகள் அந்த மாலை வேளையில் வாசிக்கும் ஓரிரண்டு இங்கிலீஷ் பாடத்துக்காக அவள் இத்தனை துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு இருந்தாள்.

ஆனால் இப்போது இனிமேல் அவள் இங்கிலீஷ் படிக்க மாட்டாள் அதை ராதாமணி கேட்க இயலாது இந்த எண்ணம் ராதாமணிக்கு வாழ்க்கையின் மீது ஒரு வெறுப்பை ஏற்படுத்தியது. தன் ஆசைக் கனவுகள் எல்லாம் நொறுங்கி விட்டனவே என்று அவள் சலித்துப் போய் விட்டாள். இதையெல்லாம் நினைத்து புழுங்கி புழுங்கி மனம் வெம்பி போய்விட்டாள் அவள் உருக்குலைந்து போய்விட்டாள்.

விஜயாவை வீட்டைவிட்டு அனுப்பினால் போதும் என்ற மனநிலைக்கு ராதாமணி வந்துவிட்டாள். எப்படியோ ஒரு மாப்பிள்ளையை பார்த்து அவனிடம் இதம் பதமாய் பேசி விஜயாவை திருமணம் செய்து கொள்ள சம்மதிக்க வைத்து விட்டாள். விஜயா படிப்பை முடித்ததும் அவளுக்கு சிக்கனமாக திருமணம் செய்ய நாள் குறித்துவிட்டாள்.

விஜயா தாயிடம் கெஞ்சி கேட்டாள், “அம்மா நான் இப்ப ஃபர்ஸ்ட் மார்க் வாங்கி இருக்கேன் என்னை மேடம் எல்லாரும் எம்.ஏ. படிக்க சொல்றாங்க நான் எம்.ஏ. முடிச்ச உடனே இந்த காலேஜிலேயே எனக்கு வேலை தருவாங்க. எனக்கு எம்.ஏ. படிக்க ஸ்காலர்ஷிப் தரேன்னு சொல்றாங்க. நான் பஸ்ட் மார்க் வாங்கி இருக்கேன் நான் இன்னும் ரெண்டு வருஷம் படிக்கிறேன்மா” என்றாள்.

போதும் போதும் நீ படிச்சது. போய் சேர வேண்டிய இடத்துக்கு போய் சேரு என்று வெறுப்புடன் ராதாமணி சொல்லிவிட்டாள். மகளை இப்படி கடிந்து கொன்டோமே என்று அவளுக்கு வேதனையாக இருந்தது. தமிழ் மீடியம் பிள்ளைகளுடன் தன் மகளை பேச விடாத ராதாமணி இன்று தமிழ் கூட எழுத படிக்க தெரியாத மாப்பிள்ளையை தான் மகளுக்கு நிச்சயம் செய்திருந்தாள்.

இன்னும் எத்தனை வருஷம் படித்தாலும் இவள் இங்கிலீஷ் படிக்க போவதில்லை. இந்த தமிழ் பி.ஏ. படிக்க நான் இத்தனை வருஷம் உழைத்திருக்க வேண்டாமே என அழுதாள். தன் இங்கிலீஷ் கனவுகள் கரைந்ததை எண்ணி கண்ணீர் விட்டாள்.

தனது தமிழ் அறிவை தாய் மதிக்கவில்லையே. சனியன் பிடித்த ஆங்கிலம் தன் தாயை உடனிருந்தே கொல்லும் வியாதி போல் பிடித்து கொண்டதே என்றெண்ணி விஜயா கலங்கினாள்.

இவள் தமிழுக்காக அழுதாள். அவள் தாய் இங்கிலிஷுக்காக அழுதாள். அன்று இரவு அந்தக் குடிசைக்குள் இரண்டு உள்ளங்கள் கரைந்து போன உழைப்பையும் கலைந்த போன கனவுகளையும் நினைத்து அழுதன.



## *5. காதல் கிளிகள்*

*வீடு வெறும் வீடாக இருந்தது நாளை காலை அந்தமானுக்கு பயணம் மகள் சிந்தாமணி நிம்மதியாக தூங்குகிறாள் அவளுக்கு இது பிறந்த வீடு. எனக்கு நான் கட்டுன மாளிகை. பதினைஞ்சு பதினாறு வயசுல கட்டினது.*

*மூக்கமாவுக்கு ஐம்பது வயது ஒருக்கும் அள்ளி முடிந்த கூந்தல் சிவந்த தேகம்; தோள்களில் கிளிப் பச்சை; ஜாக்கெட் போடும் பழக்கமில்லை ஆனால் இரண்டு முந்தானை மடித்து போட்டிருப்பாள் மூக்குக்கு அருகில் ஒரு கருப்பு மறு; சிங்கப்பல் சிரிப்பு; வசீகரமான கிராமத்து முகம்; சொந்த மாமனை கட்டி மதுரைக்குக் குடி வந்தாள்.*

*இந்த வீடு அவளும் மாமனும் மண் பிசைந்து இரண்டடி சுவர் வைத்து மேலே கூரை போட்டு கட்டினார்கள். அப்போது வாசல் இரண்டடி உயரம் மட்டுமே. மாமன் கை வண்டி இழுத்தார். சிந்தா கல்யாணத்தின் போது தான் ஐந்தடி சுவர் வைத்து உள்ளே சிமென்ட் தளம் போட்டு கூரை வேய்ந்து வாசலில் ஐந்தடி வாசல் வைத்தனர். அப்போது திமுக ஆட்சி நடந்தது. சாதிக்கட்டுப்பாடுகள் கொஞ்சமாக மறைந்தன எல்லோரது வீடும் வாசல் உயர்த்தி கட்டப்பட்டன. இரு பக்கமும் ஒரு ஆள் கால் நீட்டி படுக்கும் அளவுக்கு திண்ணை எடுத்தனர்.*

*இப்போது வீட்டில் ஒரு சாமானும் இல்லை மூட்டை முடிச்சுகள் கட்டப்பட்டு தயாராக இருந்தன. அவள் வட்டிக்கு கொடுத்திருந்த மூனு லட்ச ரூபாயும் சமர்த்துக்காரி சிந்தாமணி போய் வசூல் பண்ணிட்டா. பித்தளை குடம் பானையை வித்துட்டா. மாமனும் நானும் எடுத்த போட்டாவை நான் எடுத்து வச்சுக்கிட்டேன். அந்த போட்டோ மலைக்கள்ளன் படம் பார்க்க போனப்ப எடுத்தது. மாமன் கூட முதமுதல்ல படம் பார்க்க போனேன். டிக்கெட் கெடைக்கலைன்னுட்டு அழுதேன் மாமன் என்னை சமாதானப்படுத்தி 'வா சோடியா*

*நின்னு போட்டோ எடுப்போம்'னு எடுத்துக்கிட்டு வந்துச்சு. மாமன் வண்டி இழுக்கும் நான் பின்னாடி இருந்து தள்ளுவேன். எங்க வண்டி நல்லாத்தான் ஓடுச்சு ஒரு பொம்பளைப்பிள்ளை பிறந்தா. அவளையும் பத்தாப்பு படிக்க வச்சு அந்தமாணுல கட்டிக்குடுத்தோம்.*

*அன்னைக்கு ஒரு நாள் மத்தியானம் மாமன் கை வண்டி இழுத்துக்கிட்டு வந்தப்ப கார்வண்டி மோதி கீழே விழுந்திருச்சு பெரிய ஆஸ்பத்திரிக்கு தூக்கிட்டு போனோம் டாக்டர் மூனு மாசம் ஆகும்ன்னுட்டாரு, நான் வந்து இரண்டு இளந்தாரி பையன்களை வண்டி இழுக்க சொல்லி பின்னாடி இருந்து தள்ளிக்கிட்டு போவேன். கொஞ்ச கொஞ்சமாக மாமனுக்கு காலு சரியாச்சு, ஆஸ்பத்திரியில் ஒரு நரசய்யா நல்லா கவனிச்சுக்கிட்டாரு, நான் வண்டி தள்ளுறதை பார்த்துட்டு என்ன கூட்டிகிட்டு போய் ஒரு ஓரமா வச்சு கலங்குனாரு. இனி உன் புருஷன் வண்டி இழுக்க முடியாது என்ன செய்வன்னு கேட்டாரு நான் அழுதேன் வெங்காயம் வித்தாவது பெழச்சுக்குவேன்னு சொல்லி அழுதேன் 'அழாதே நான் இருக்கேன்'னு தோளை பிடிச்சு ஆறுதல் சொன்னாரு.*

*மாமனும் அவரும் ஆஸ்பத்திரியில வச்சு நல்லா பழக்கமாயிட்டாங்க வீட்டுக்கு வந்ததும் அவர் கொஞ்சம் காசு கொடுத்து டயர் வண்டி வாங்கி கொடுத்தாரு அப்புறமா நாங்க சிறுக சிறுக குடுத்து அவர் கடனை அடைச்சுட்டோம். டயர் வண்டின்னா மரச் சக்கரத்துக்கு பதில் டயர் சக்கரம் இருக்கும் முன்னால மாடு கட்டியிருக்கும் மனுஷன் இழுக்க வேண்டியதில்ல. மாமன் ஜம்முனு உட்கார்ந்தபடி வண்டி ஒட்டுச்சு பையன்ங்க ரெண்டு பேரும் சாக்கு மூடைகளை தூக்கி வண்டியில வைப்பாங்க. கால் அடிபட்டதில இருந்து மாமன் வீட்டுக்குள்ள வரல திண்ணையிலயே தங்கிருச்சு காலை தொங்கப் போட்டு உட்கார எழுந்திருக்க திண்ணை வசதியா இருந்துச்சு. அடுத்த திண்ணையில வந்து உட்கார்ந்து நர்சய்யா பேசுவாரு; கட்டுப் போடுவார்; மருந்து கொடுப்பாரு; அவருக்கு குடும்பம் எதுவும் இல்லை, மலேயாவில இருந்து வந்தவரு, தனி கட்டை.*

*ஒரு நாள் இங்க வந்தவரு பேசிக்கிட்டு இருந்துட்டு நைட் டூட்டி பார்த்த களைப்புல அப்படியே தூங்கிட்டாரு.*

மாமன் அவரை உள்ள போய் படுக்க சொன்னாரு. அன்னையில இருந்து அவரும் எங்க குடும்பத்துல ஒருத்தராயிட்டாரு. இங்க இருந்து வேலைக்கு போவாரு. சாங்காலம் இங்க வந்து வீட்டுக்குள்ள படுத்துக்குவாரு. யாரும் அதை பத்தி ஒன்னும் பேசிக்கிட்டதில்லை. பக்கத்து வீட்டுக்காரிக சாடையா என்ன பார்த்து ரெட்டை குதிரையில சவாரி செய்றவன்னு பேசுவாங்க நான் காது கேட்காத மாதிரி போவேன்.

ஒரு நாள் திண்ணையில உட்கார்ந்துக்கிட்டு ''பென்சன் நோட்டுல வீட்டம்மா படம் ஒட்டனும்னு ஆபிசுல சொல்றாங்க. ஒட்டுனா என்னோட பென்ஷன் கெடைக்கும். மூக்கம்மா படத்தை ஒட்டி குடுக்கவா''ன்னு என் மாமன்கிட்ட கேட்டாரு. "பிற்காலத்துக்கு அவளுக்கு ஒரு ஆதரவா இருக்குமேன்னு கேட்டேன் அவ யாரும் இல்லாத ஆனாதை ஆயிரக்கூடாதே" ன்னாரு மாமனும் சரின்னுச்சு.

அன்னைக்கு சாயந்தரம் என்னை போட்டோ பிடிக்க கூட்டிட்டு போய் சேர்ந்து நின்னு நர்சய்யா ஒரு போட்டோ எடுத்தாரு. அதை அவர் ஆபிசுல குடுத்துட்டாரு. ஒன்றை தன்னோட பர்சிலயே வச்சுருந்தாரு. அந்த போட்டோவில நான் ரொம்ப நல்லா இருந்தேன். மாமன் கிட்ட போட்டோவை காட்டல. யாருகிட்டயும் காட்டல.

இது நடந்து ஒரு மாசத்துக்குள்ள மாமனுக்கு திடீருன்னு வலிப்பு மாதிரி வந்து பொசுக்குனு இறந்து போயிருச்சு.ஆள் இல்லாத திண்ணையை பார்த்து கதறி கதறி அழுதேன். அதுக்கு பெறகு நல்லது கெட்டதுக்கு நான் மட்டும் தனியா போவேன் அத நெனச்சு தான் ரொம்ப கலங்குனேன். நர்சய்யா அமைதியா இருந்தாரு. அவருக்கு பேச்சு துணையா இருந்த மனுசனும் போய்ட்டாரு. எங்களுக்குள்ள எப்பவுமே அதிக பேச்சு கெடையாது. அது கூட தான் அவரு பேசிக்கிட்டே இருப்பாரு.

ரெண்டு மூனு வருசம் ஆச்சு. ஒரு பிரச்சனையும் இல்ல. டயர் வண்டியையும் மாடுகளையும் வித்துட்டோம். அவரு மட்டும் ஆஸ்பத்திரி வேலைக்கு போய்ட்டு வந்தாரு.

ஒரு நாள் மத்தியானம் ஒரு ஆள் வேகமா வந்து அவருக்கு மூச்சிரைக்குதுன்னு சொன்னாரு. நானும் வேகமாத்தான் ஓடுனேன் ஆனால் நான் போறதுக்குள்ள உசிரு போயிருச்சு. பொணமா தூக்கிட்டு வந்தோம். எங்கே இருந்தாங்களோ சாமி அம்புட்டு சொந்தக்காரங்க. திடீர்னு வந்துட்டாங்க நான் அழுதுக்கிட்டே இருந்தேன் வேற என்ன செய்ய? என்ன நிக்க வச்ச சாமியும் போச்சு நிலைக்க வைச்ச சாமியும் போச்சு, இப்பதான் அநாதையான மாதிரி தவிப்பா இருந்துச்சு. நான் இருந்து ரெண்டு பேரையும் அனுப்பி வச்சுட்டேன். எனக்கு யார் இருக்கான்னு அழுதேன். தண்ணியில மீனு அழுத கதை தான் என் கதை.

அப்புறம் ஒரு வாரம் கழிச்சு அவரு அண்ணன் மகனாம் ஒருத்தன் வந்தான். 'நான் தான்கொள்ளி வச்சேன். எனக்கு தான் சித்தப்பா பணம் வரணும்'ன்னான் நான் பார்த்தேன். இனி அழுதுக்கிட்டு இருக்க கூடாதுன்னு கிளம்பிட்டேன். என்ன ஆனாலும் சரி இவனை விடக்கூடாதுனுட்டு போய் ஒரு வக்கீலை பார்த்தேன்; பென்சன் புஸ்தகத்தை காட்டுனேன்; அவர் அவனை கூப்பிட்டு பேசினாரு; அவருக்கு நிறைய பீஸ் குடுத்தேன். ஆளுக்கு பாதி பணம்ன்னு முடிவாச்சு. பென்ஷன் முழுக்க எனக்கு. அதுல அவனுக்கு பங்கு இல்லை. வந்த காசை வட்டிக்கு விட்டுக்குட்டு நல்லா தானே இருந்தேன்.

என் மகக்காரி இருக்காளே, சதிகாரி. ஒரு நாள் போன் பண்ணி "உன் பேரனுக்கு அமெரிக்காவுல வேலை கெடச்சிருக்கு உன்கிட்ட ஆசிர்வாதம் வாங்க வருறான்"னு சொன்னாள் இங்கே வந்துட்டு போனவன் அவுங்க அம்மாகிட்ட போய் "ஆத்தா நல்லா வசதியா இருக்கு; நாம இங்க கஷ்டப்படுறோம்"னு சொல்லவும் அவள் இங்கே புறப்பட்டு வந்துட்டாள் "என் காசை எல்லாம் பிடுங்கிக்கிட்டு, எனக்கு பிச்சை கஞ்சி ஊத்த என்ன அவ கூட அந்தமானுக்கு அழைச்சுக்கிட்டு போறாளாம். தெருக்காரிகளும் என்னை மக கூட போ போன்னு வெரட்டுராளுக. எனக்கு நாயம் பேச யாருமில்லயே. நான் காசிருந்தும் ஆருமில்லாத அனாதையாய்ட்டேனே.

தூக்கம் வரல, மனசு கடந்து தவிக்குது. இந்த வீட்டை விட்டுட்டு என் ஆவி கூட போகக் கூடாதுன்னு தவிக்கிறேன். வாசலில் அவர் நிக்குறாரு உள்ள வரக்கூடாதுன்னு சொல்றேன். வராம நிக்குறாரு கனவா நெசமான்னு தெரியல. ஆனா நான் வர்றேன் நான் வர்றேன்னு சொல்றேன் அவர் காதுல விழுந்த மாதிரியே தெரியல. சும்மா நிக்குறாரு. மொகம் சரியா தெரியல. ஆனா அவருதான். அவரே தான். சாமி என்ன அநாதை ஆக்கிராதன்னு அழுறேன். அப்புறம் என்ன நடந்துச்சுன்னே தெரியல.



## *6. டீச்சர் வீடு*

*டீச்சர் வீட்டுக்குள் நுழைந்தேன், உள்ளே ஹாலில் சார் போட்டோ பெரியதாக இருந்தது. கிறிஸ்தவர் என்பதால் படத்துக்கு மாலை, ஊதுபத்தி, விளக்கு என்று எதுவும் இல்லை. 'வா லதா உன் மகன் எங்கே?அவன் வரலியா என்றார் டீச்சர். அவருக்கு வயது எழுபதை எட்டியிருக்கும். இன்னொரு ரிட்டயர்டு டீச்சரும் இவரும் மட்டும் இருக்கிறார்கள்.*

*"இந்தாங்க டீச்சர் வாடகை" என்று பணத்தை கொடுத்தேன்.*

*அம்மாவும் பொண்ணும் கேக்கமாட்டீங்க. அவனுங்க ரெண்டு பேரும் அமெரிக்காவுல இருக்குறானுங்க. எனக்கு பென்ஷன் இருக்கு. இந்த பணம் எதுக்கும்மா? அம்மா நல்லாருக்காங்களா? அப்போ அவுங்க சொந்த சகோதரி போல உதவுனாங்க; அதை மறக்கவே மாட்டேன்.*

*நல்லா இருக்காங்க டீச்சர்; நடக்க முடியல. இப்பவும் டீச்சர் தான் எனக்கு தாய் மாதிரி, என்னை அன்பா ஆதரிச்சாங்கன்னு சொல்லிகிட்டே இருப்பாங்க. டீச்சர் வீட்டுக்கு போய்ட்டு வரும்போது தாய் வீட்டுக்கு போய்ட்டு வர்ற மாதிரி பை நிறைய சாமான் போட்டு குடுத்து விடுவாங்கன்னு சொல்லுவாங்க.*

*லதா, கடவுள் எப்படியும் நல்லவங்களுக்கு உதவாம போக மாட்டாரு காப்பி போடு குடிப்போம்.*

*உடனே நான் போய் காபி போட்டேன்; இருவரும் குடித்தோம்.*

*லதா என் காலமும் முடிய போகுது. நீ ஒரு தானப் பத்திரம் எழுதி கொண்டா. நான் கையெழுத்து போட்டு*

*தர்றேன். இந்த வீடுகளை உன் பேருக்கும் உன் தங்கச்சி பேருக்கு மாத்திடலாம்.*

*வேணாம் டீச்சர் இப்பவே நாங்க நல்லா தான் இருக்கோம். நாளைக்கு தம்பிமாருக்கு எதுக்காவது தேவைப்பட்டால் இந்த வீடுகளை வித்து பணம் எடுக்கலாம்.*

*நீ சொன்னா கேக்க மாட்ட. அவனுங்க இங்கே எங்க வரப்போறானுங்க. நான் திடீர்ன்னு செத்தா தேவாலயத்துக்கு இந்த வீடுக இரண்டும் போகும் உங்க அம்மா அப்பாக்கு நான் நன்றிக்கடன் தீர்க்கனும்னு நெனக்கிறேன் நீ மறுத்து பேசுற.*

*இப்படியே கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு வந்துவிட்டேன்.*

*அன்று நடந்ததை நினைத்துக்கொண்டேன். அம்மாவும் நானும் அழுதுகிட்டே டீச்சர் வீட்டுக்கு போனோம். அங்கே வீடு வாசல் எல்லாம் கழுவிவிட்டு ஆட்கள் எல்லோரும் தலைக்கு குளிச்சுட் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தாங்க. அம்மாவை பார்த்ததும் டீச்சரின் தங்கச்சி சகுந்தலாக்கா வந்து,*

*“லதாம்மா அழாதிங்க இப்ப தான் அக்கா தூங்குறாங்க” உடனே லதாம்மாவை உள்ளே ரூமுக்கு அழைச்சுட்டு போனாங்க.*

*“என்னம்மா ஆச்சு”*

*‘ஹார்ட் அட்டாக்’ என்றார் சகுந்தலாக்கா.*

*நீங்க எப்பம்மாவந்தீங்க.*

*நாங்க காலையில தான் வந்தோம். வந்த உடனே எடுத்திட்டாங்க.*

*டீச்சர் எங்க இருந்தாங்க, பசங்களை கானோமே!*

*விளையாடுவானுங்க. அக்கா எங்க வீட்டுல தான் இருந்தாங்க கிறிஸ்துமஸ்க்கு வந்துட்டு முந்தாநாள் தான் அத்தான் இங்க வந்தாரு. இன்னக்கு கிளம்பி நாளைக்கு அங்கே வர்றதாக சொல்லியிருந்தாரு. அதுக்குள்ள இப்படி ஆயிருச்சு.*

சகுந்தலாக்கா அமைதியாக பேசினாங்க,. யார்கி டயும் ஒரு பதட்டமோ அதிர்ச்சியோ இல்லை. அம்மாவும் கொஞ்ச நேரம் தேம்பிகிட்டே இருந்தாங்க வாய்விட்டு புலம்பினாங்க. எனக்கு பெத்த தாய் மாதிரின்னு சொல்லி அழுதாங்க.

டீச்சர் கண் முழிச்சாங்க, என்னை தலையசைத்து கூப்பிட்டாங்க அம்மாவும் பக்கத்தில வந்து உட்கார்ந்து அழுதாங்க. டீச்சர் சாப்பிட்டுட்டு போங்கன்னு சொன்னதும். அம்மா ‘ஓ’ன்னு கத்தி அழுதுட்டாங்க.

எங்களுக்கு டீச்சர் வீடு தான் சொந்தம் சுற்றம் எல்லாம். எங்க அம்மா அப்பா லவ் மேரேஜ் அதனால ஜாதிக்காரங்க யாருமே அவுங்கள சேர்த்துக்கல. டீச்சர் தான் லதாவை நல்லா படிக்க வையுங்க. அப்புறம் அவ உங்களை காப்பாத்துவா, சொந்தக்காரங்க இல்லைனா என்ன நான் இருக்கேன். எங்க வீட்டுக்கு பிள்ளைங்களை அனுப்பி வைங்கன்னு சொல்வாங்க.என் தங்கையை கூட தத்து கேட்டாங்க. என் அம்மா கொடுக்கல. இப்போ சாப்பிட மறுத்துட்டு அம்மா கிளம்பிட்டாங்க. .

ஒரு வாரம் கழித்து அம்மா அப்பாவுக்கு சாப்பாடு வைக்கும்போது ரகசியமாக பேசினாங்க. இன்னைக்கு டீச்சரை பார்க்க பள்ளிக்ககூடம் போயிருந்தேன். ஒரு விஷயம் கேள்விப்பட்டேன். ரொம்ப மனசுக்கு சங்கடமா போச்சு. டீச்சர் வீட்டுக்காரரு மாரடைப்பு வந்து சாகல்லியாம் யாரோ அடிச்சு கொன்னுட்டாங்க.

ஐயையோ யாரும் போலிசுக்கு போகலையா?

இல்லங்க வெளியே தெரிஞ்சா அசிங்கம்னு கொழுந்தன் சொல்லிட்டாராம் அவுர் தான் பிணத்தை இறக்கி கொண்டு வந்து வீட்டுல வச்சுட்டு டீச்சருக்கு போன் பண்ணுனாராம்.

கொன்னுட்டாங்கன்னு சொன்ன, அப்புறம் இறக்குனாங்கன்னு சொல்ற,

அவர் எப்படித்தான் செத்தாரு?

*அவரு கவர்ன்மென்ட் ஆபிசரு. அவர் தான் பியுனோட சம்சாரத்தை வச்சிருந்தாராம் அடிக்கடி அங்க அவ விட்டுக்கு போவாராம். டீச்சர் கிறிஸ்மசுக்கு ஊருக்கு போய்ட்டாங்கள்ல இவர் ஜாலியா கிளம்பிட்டாரு. அங்க பக்கத்து வீட்டுக்காரங்க இவர்கிட்ட எதுக்கோ தகராறு பண்ணிருக்காங்க. எதுக்குன்னு யாருக்கும் தெரியல. திடீருன்னு கைகலப்பாகி இருக்கு அவனுங்க அடிச்சதுல படாத எடத்துல பட்டு இவரு செத்துட்டாரு ஒடனே அந்த ஆளுங்க இவரை தூக்கில தொங்கவிட்டுட்டு இவர் தம்பி கிட்ட வந்து சொல்லி இருக்கானுங்க.*

*என்ன சொன்னாங்க ?*

*எங்க சாதிக்காரப் பிள்ளையை ஊருக்கு தெரியாம வச்சிருந்தான் இன்னைக்கு அவளை என்கிட்டே கட்டித்தரச் சொல்லி கேட்டான் நாங்க மறுத்திட்டோம். உடனே அங்கேயே தூக்கு போட்டுகிட்டான்னு சொல்லிட்டாங்களாம், அடிச்சதை யாரும் சொல்லலியாம். ஆனா ஒடம்பு முழுக்க காயம். டீச்சர் சொல்லி அழுதாங்க எனக்கு மனசே கேக்கல இப்ப அவர் பணம் கொஞ்சம் வருமாம் கொழுந்தனும் பாதி பணம் கேக்குறாராம் அந்த ஆட்களுக்கு கொடுக்கனும்கிறாராம்டீச்சர் என்ன செய்வாங்க, பாவம்.*

*ஏன் முந்தியே டீச்சருக்கு இவர் குணம் தெரியாதா? கண்டிச்சு வைக்க கூடாதா? எதுக்கு அவரை தனியா விட்டுட்டு ஊருக்கு போறாங்க?*

*அந்த ஆளு ஆரம்பத்திலே இருந்தே அப்படி தான். கொஞ்ச நாள் டீச்சர் டியுஷன் கூட எடுக்காம பள்ளிக்கூடம் விட்ட உடனே வீட்டுக்கு போனாங்க. என்னன்னு நான் கேட்டதுக்கு வீட்டுல அவர் வேலைக்காரிய வச்சுக்கிட்டு என்ன கொடுமை படுத்திறாரு. அதனால் வேலக்கு ஆள் வைக்கல லதாம்மா. நான் வீட்டுக்கு போய் தான் மாவாட்டணும் பாத்திரம் வெளக்கணும் துணி துவைக்கணும்னு சொன்னாங்க.*

*இப்ப என்ன செய்ய போறாங்களாம்?*

இப்ப வீட்டுல யாரும் இல்லையாம். எல்லோரும் ஊருக்கு திரும்பி போய்ட்டாங்களாம். தங்கச்சிமார் முணு பேருக்கு இவுங்க தான் கல்யாணம் பண்ணி வச்சாங்க. அவர் அதுக்கெல்லாம் ஒன்னும்சொல்ல மாட்டார். தம்பி ரெண்டு பேருல ஒருத்தர் மிலிட்டரி, சின்னவர் வரல போல. எல்லோரும் ஊருக்கு போய்ட்டாங்க நான் இனி என் சம்பளத்த மட்டும் வச்சுக்கிட்டு என்ன செய்வேன்னு அழுறாங்க.அவருக்கு வர்ற பணத்தை நம்ம கிட்ட தர்றாங்களாம் வட்டிக்கு விட்டு மாசாமாசம் பணம் தர முடியுமான்னு கேட்டாங்க.

வேண்டாம் வேண்டாம் யாராவது வாங்கிட்டு கொடுக்கலைன்னா நாம பொறுப்பேற்க முடியாது. எவ்வளவு இருக்காம் ?

பதிலை காணோம் அம்மா விரலை காட்டி தொகையை சொல்லியிருப்பாள்.

கோபால் கொத்தனார் வீடு கட்டி விக்குறார். ரெண்டு வீடு ஜோடியா கட்டியிருக்காரு அதை வாங்கி போட சொல்லு. இப்ப வாடகை வரட்டும் பின்னாடி பையனுங்க ஆளுக்கொரு வீடாக எடுத்துக்குவாங்க,

அப்பா சாப்பிட்டுவிட்டு கை அலம்பினார். ‘டீச்சருக்கு இரண்டு வீட்டையும் சல்லிசான விலைக்கு அப்பா வாங்கி கொடுத்தார்’.

இரண்டு வீடுகளில் ஒன்றில் நாங்களும் மற்றொன்றில் இன்னொருவரும் குடி இருந்தோம் எனக்கு கல்யாணம் ஆகவும் நான் ஒரு வீட்டிலும் என் அம்மா ஒரு வீடுமாக நாங்களே இன்னும் குடியிருக்கிறோம். அப்போ இந்த வாடகை டீச்சருக்கு மிகவும் உதவியாக இருந்தது. இப்போ இது தேவையில்லைன்னு சொல்வாங்க இருந்தாலும் எங்க நன்றிக்காக நாங்க கொடுத்துகிட்டே வர்றோம். டீச்சர் வாடகை வேண்டாம் என்று சொன்னாலும் நாங்க கேட்குறதில்லை இந்த இரண்டு வீட்டுக்கும் டீச்சர் வீடுன்னே பேர் வச்சாச்சு.

*வீடு வந்துருச்சு,*

*அம்மா சுருண்டு படுத்திருந்தார். என்னம்மா வாடகைய குடுத்தியா? டீச்சர் நல்லாருக்காங்களா? பார்க்கனும்னு ஆசையா இருக்கு. முடியலயே.*

*நல்லா இருக்காங்கம்மா உங்களுக்கு நன்றிக்கடன் தீர்க்கனுமாம் அதுக்கு வீட்டை எங்க பேருக்கு மாற்றி தருவேன்னு பிடிவாதம் பிடிச்சாங்க. நான் வேண்டாம்னுட்டேன்,*

*வேண்டாம் வேண்டாம் அந்த மகராசி வீடு நமக்கெதுக்கு. அவுங்க எனக்கு பெத்த தாய் மாதிரி என்று ஏதேதோ தனக்குள் அம்மா பேசிக்கொண்டே இருந்தார்,*

*நன்றி தேவதை ரெண்டு வீட்டுக்குமாக மாறி மாறி அலைந்து கொண்டிருந்தாள்.*



# *7. தராசு முள்*

*அன்று தீபாவளி வீடு அமைதியாக இருந்தது. வாசலில் நிழல் தெரிந்தது. சந்தனம் என்ன செய்ற?*

*''யாரு ரஞ்சிதம்மாவா வாங்கம்மா உள்ள வாங்க''*

*மெதுவாக நடந்து அடுப்படிக்குள் நுழைந்து பாத்திரம் விளக்கி கொண்டிருந்த சந்தனத்திடம் வந்தார் ரஞ்சிதம்மா.*

*ரஞ்சிதம்மா தான் சந்தனத்துக்கு இரண்டு பிள்ளைகளுக்கும் பிரசவம் பார்த்து மூன்று மாதம் வரை கூடவே இருந்து குழந்தைகளை கவனித்துக்கொண்டவர். இவரை பெத்த தாய் மாதிரி என்று சந்தனம் அடிக்கடி சொல்வாள்.*

*''எங்கே பிள்ளைகளை காணோம்''*

*அவுங்க சித்தப்பா துபாயில இருந்து வந்திருக்காரு அவுங்க வீட்டுக்கு தம்பியும் பாப்பாவும் போயிருக்காங்க. அவுங்க பிள்ளைகளோடு விளையாட போயிருக்காங்க. காலையிலேயே புதுசு உடுத்திட்டு பலகாரம் எல்லாம் எடுத்துக்கிட்டு போய்ட்டாங்க.*

*அடுத்து அமைதியாக தலையை ஒரு பக்கமாக பலமாக ஆட்டியபடி எங்கே என்று கைச்சாடையாக கேட்டார். சந்தனம் அதற்கு தெரியல என்று கையை அசைத்துக் காட்டினாள். ரஞ்சிதம்மா பெருமூச்சு விட்டார்.*

*பக்கத்து அறையில் டிவியில் பட்டிமன்றம் பார்த்துக்கொண்டிருந்த பாஸ்கருக்கு இந்த அமைதி அவர்கள் யாரை பற்றி பேசியிருப்பார்கள் என்பதை உணர்த்தியது.*

*டிவியை ஆஃப் பண்ணிவிட்டு வெளியே வந்த பாஸ்கர், ''சந்தனம் கொஞ்சம் வெளியே போய்ட்டு வர்றேன்''*

என்றார். சட்டையை மாட்டிக்கொண்டு அவள் பதிலை எதிர்பார்க்காமல் போய்விட்டார்.

''வாங்கம்மா ரெண்டு இட்லி சாப்பிடுங்க'' என்று சொல்லிய சந்தனம் நான்கு இட்லியை தட்டில் வைத்து கறிக்குழம்பு ஊற்றினாள். ஹாலுக்கு கொண்டு வந்தாள். இருவரும் உட்கார்ந்தனர்.

எங்கேம்மா போயிருப்பான்?

தெரியலையே. காலையில எந்திருச்சான்; குளிச்சான்; புது டிரஸ்ஸை எடுத்துக்கிட்டு போய் சாமி படத்துக்கு முன்னாடி வச்சு மஞ்சள் தேய்ச்சு போட்டுக்கிட்டு சாப்பிடாமல் போய்ட்டான்.

அவரு சாப்பிட்டாரா?

ம்ம் சாப்பிட்டாரு. பிள்ளைகள் ரெண்டும் குளிச்சுட்டு புதுசு போட்டுக்கிட்டு ரெண்டு பேர் முன்னாடியும் விழுந்து கும்பிட்டுட்டு அப்பா கூட சேர்ந்து சாப்பிட்டாங்க. இப்ப சித்தப்பா வீட்டுக்கு போய்ட்டாங்க. இவன் தான் அவுங்களை மதிக்க மாட்டேன்றான்; மரியாதையா பேச மாட்டேன்றான்

சந்தனம் எனக்கு அந்த கிழவி மேல தான் கோபம் கோபமா வருது.

என்னம்மா செய்ய? அந்தக் கிழவி மட்டும் இவர் அவன் அப்பா இல்லன்னு சொல்லாம இருந்திருந்தா இன்னைக்கு பிள்ளைகளோடு பிள்ளையா அவனும் தங்கம் போல இருப்பான். அது வரைக்கும் அவன் எம்புட்டு பாசமா இருந்தான் தெரியுமா?

நடந்ததை நெனச்சு என்ன செய்ய.? சந்தனம் நீ சாப்பிடு நான் இட்லி வச்சு கொண்டு வந்து தர்றேன் என்று ரஞ்சிதம்மாள் உள்ளே போய் தட்டில் இட்லியும் குழம்பும் கொண்டுவந்தார்.

சந்தனம் இட்லி தட்டை பார்த்தபடி இருந்தாள். பெத்த பிள்ளை சாப்பிடாமல் எங்கோ பட்டினி கிடக்குமே என்ற எண்ணம் வந்ததும் அவள் கண்ணில் கண்ணீர் பொங்கிக்கொண்டு வந்தது. முந்தானையால் கண்களை துடைத்தாள்.

‘சாப்பிடும்போது அழாதெ’. அவன் சின்னப்பையன் அதுனால அப்படி இருக்கிறான். நாளைக்கு நல்லா வந்துருவான் தம்பி தங்கை அப்பான்னு பாசமா இருப்பான். சாப்பிடு, அழாத. தண்ணிய குடி.

அம்மா அவனுக்கு தம்பி தங்கச்சி மேல பாசம் இருக்கு. என்ன அவுங்களை கூட்டிக்கிட்டு வா தனியா போவோம் இந்த ஆளை பார்த்தா எனக்கு பிடிக்கல. அவரை ஒரு நாள் நான் கொன்னு போட்டுட்டு ஜெயிலுக்கு போயிருவேன்னு சொல்றான். ‘நான் தராசு முள்ளு மாதிரி தவிக்கிறேன்மா’ சத்தமாக அழ ஆரமபித்தாள்.

அதெல்லாம் செய்யமாட்டன்மா. இந்த வயசுல எல்லா வீட்டுலயும் ஆம்பிளை பிள்ளைகளுக்கு அப்பாவை பிடிக்காது. இவனும் அப்படித்தான். நீ கொஞ்சம் பொறுமையா இரு. அவன் முன்னாடி அவர் கிட்ட நெருங்காதே. கொஞ்ச நாளைக்கு தான். அப்புறம் சரியா போயிரும்.

நாற்பது நாள் பிள்ளையை கையில ஏந்திக்கிட்டு கோயிலுக்கு போனேன். அங்க என்னைய பார்த்திட்டு அவரை எங்கேன்னு கேட்டாங்க. ஒரு வாரத்துல வந்துட்டேன்னு சொன்னேன். என்னை அப்படியே கூட்டிக்கிட்டு போய் தாலியை கட்டி வீட்டுக்கு அழைச்சுக்கிட்டு வந்தாங்க. நான் நன்றியை மறக்கலாமா. ஒரு காலத்துல நாங்க ரெண்டு பேரும் எப்படி காதலிச்சோம் தெரியுமா. ஊரே பார்த்து போறாமைப்பட்டுச்சு. என் மாமன் சதிகாரன். எங்க அம்மாவை மிரட்டி என்னை கட்டிக்கிட்டு போனான். எனக்கு அவன் கூட இருக்க மனசு ஒப்பல இவரு நெனவு தான் மனசு முழுக்க இருந்துச்சு. நாலு நாள் அந்த வீட்டுல இருந்தேன். அப்புறம் நடுராத்திரி எந்திரிச்சு எங்கம்மா கிட்ட வந்துட்டேன் வரும்போது அரளிக்காயை பறிச்சுக்கிட்டு வந்து எங்க அம்மாக்கிட்ட ‘‘என்னை புருஷன் வீட்டுக்கு போன்னு சொன்னா நான் அரளியை அரைச்சு குடிச்சு செத்துருவேன்னு’’ சொல்லிட்டேன் அப்புறம் துரும்பை கிள்ளி போட்டு முறிச்சு விட்டுட்டாங்க. மறு மாசம் பார்த்தா நான் முழுகல. அப்புறம் மசக்கை வேற வழியில்லாம இவனை பெத்துக்கிட்டேன். ஆனால் அவன் என் மேல உசுரா இருக்கான். நான் என்ன செய்யம்மா? இப்ப நான் உசுரோடு இருக்கிறதே அவனுக்காகதான்ம்மா. அவரு நல்லவரா இருக்காரு இவன்

*அவரை கொன்றுவேன்னு சொன்னா நான் எப்படி தாங்கிக்க முடியும். நான் சாகனும் இல்லைனா அவன் சாகனும் அவுங்கப்பா தம்பியையும் பாப்பாவையும் நல்லா பாத்துக்குவாங்க.*

*அந்த வார்த்தை மட்டும் சொல்லாதே. அவர் ஒன்னை கல்யாணம் செஞ்சது நீ சாகிறதுக்கா? நீ சகனும்னா நீ மாசமானது தெரிஞ்ச உடனே செத்துருக்கணும் இப்ப மூனு பிள்ளைகளையும் அந்த புண்ணியவானையும் விட்டுட்டு சாகனும்னு நெனைக்க கூடாது அந்தக் கிழவி மட்டும் "இவன் உங்க அப்பன் இல்லடா"ன்னு சொல்லாமல் இருந்திருந்தா அவனுக்கு ஒன்னும் தெரிஞ்சிருக்காதே. அவரு நல்ல மனுசன்மா உன்னைய இது வரைக்கும் ஒரு வார்த்தை சொல்லாமல் குடும்பம் நடத்துறாரு நீ சின்ன பையன் பேச்சை கேட்டுக்கிட்டு என்னைக்கும் அவர விட்டுட்டு பிரிஞ்சு போகக் கூடாது. சாகனும்னு நினைக்க கூடாது. அதை மட்டும் நல்லா மனசுல வச்சுக்க சந்தனம். அவர் தான் உனக்கு வாழ்க்கை, மதிப்பு, மரியாதை, குடுத்த தெய்வம் அதை மறந்துராதே. அவர் பிள்ளைகளை அநாதை ஆக்கிராதே அதுவும் நீ பெத்த பிள்ளைக தான? அப்புறம் ஏன் அதுகளை மறந்த? அவன் பிள்ளை ஒனக்கு முக்கியம் இவரு பிள்ளை முக்கியம் இல்லையா?*

*இல்லைங்கம்மா அதை நான் என்னைக்கும் மறக்க மாட்டேன் அன்னைக்கு அவர் "அவன் தான் உன் பிள்ளை இதுக ரெண்டும் என் பிள்ளையா"ன்னு கேக்குராரும்மா எனக்கு உசுரே போய்டுச்சு அம்மா எனக்கு மூனும் என் பிள்ளை தான். பெத்தவ பிரிச்சு பார்ப்பாளா? இதுக ரெண்டும் மரியாதையா சொன்ன படி கேட்டு நல்லா படிக்குதுக. அவன் விளையாட்டு புத்தியா திரியுறான் ரெண்டு வருஷம் பெயிலாயிட்டான் இப்ப எட்டு போகனும் ஆறு போறான். அவன் அப்பான்னு சொல்லிக்கிட்டு பள்ளிகூடத்துக்கு போக அவருக்கு அவமானமா இருக்கு அன்னைக்கு ஒரு டீச்சர் அவர்கிட்ட "இவன் உங்க பிள்ளையான்னே தெரியல சார். ரொம்ப சேட்டை"ன்னு சொல்லிருக்கிறாங்க. வந்து என்கிட்டே சொல்லிட்டு "ஊருக்கே தெரிஞ்சு போச்சு இனி நீயே அவன் கிளாசுக்கு போய் டீச்சரை பார்த்து பேசு"ன்னுட்டாரு.*

*சரி கவலைப்படாதே. கொஞ்ச நாள் பொறுமையா இரு. எல்லாம் சரியா போயிரும் அவன் கொஞ்சம் வளர்ந்தா அவனுக்கு அப்பாவை பத்தி தெரிய ஆரம்பிக்கும் நீ அவசரப்படாதே. சாப்பிடு தட்டில வச்ச இட்லி அப்படியே இருக்கு. சாப்பிடும்மா என்றார் ரஞ்சிதம்மா.*

*வீட்டு வாசலில் செருப்பை கழற்றி போட்டு விட்டு வீட்டுக்குள் வந்தார் பாஸ்கர். ஹாலில் இருந்த சேரில் உட்கார்ந்தார். ரஞ்சிதம்மா எழுந்து ஃபேனை போட்டார்.*

*“இன்னும் சாப்பிடலையா இட்லியை வச்சுக்கிட்டே உட்கார்ந்திரு சின்னப்பிள்ளை மாதிரி”. என்றார்.*

*சந்தனம் நிமிர்ந்து பார்த்து சிரித்தாள் பாஸ்கர் மனைவி மீது மகிழ்ச்சியாக இருக்கும் வேளையில் அவளை சின்னப்பிள்ளை மாதிரி இருக்கியே என்று தான் பாராட்டி சீராட்டுவதுண்டு.*

*“இன்னிக்கு அவன் ஹீரோ புதுப் படம் ரிலீஸ். அதனால் சார் முதல் காட்சி பார்க்க போயிருக்காரு இப்ப வந்திருவாரு பதினொரு மணிக்கு அடுத்த காட்சியாம். இவர் அதிகாலையில ஆறு மணி காட்சிக்கு போயிருக்காரு” என்றான்.*

*சந்தனம், ரஞ்சிதம்மாவை பார்த்து சிரித்தாள்.*

*“பார்த்தியா சந்தனம். மகனை காணலையேன்னு தேடி போயிருக்காரு”.*

*சந்தனம் தலையை ஆட்டியபடி கண்ணை துடைத்துக்கொண்டு மடமடவென்று சாப்பிட்டாள். தண்ணீரை குடித்தாள் “கோபமாக இருந்தால் உன் பிள்ளை இப்ப சந்தோஷமாக இருந்ததால அவனுக்கு சார் பட்டம் கிடைச்சிருக்கு. நல்ல மனுஷன். அவனுக்கு தான் புரியல எப்ப தான் புரியுமோ?”*

*சந்தனம் ‘வரேன்மா. தம்பி வரேன்ப்பா. பார்வதி பரமேஸ்வரன் மாதிரி நீங்க ரெண்டு பேரும் நல்லா இருக்கணும் என்று வாழ்த்தியபடி ரஞ்சிதம்மா கிளம்பினார்.*



# 8. நளாயினியின் மகள்

கண்ணம்மாவின் கணவன் கலை வேந்தனின் தீவிர ரசிகன். அவனை கலை வேந்தன் என்று சொல்வதை விட அவன் காதல் வேந்தன் என்றே சொல்லி மகிழ்வான். அன்று அந்தக் காதல் வேந்தனின் மூன்றாவது கல்யாணச் செய்தி பத்திரிகைகளில் வந்தது. வெளிநாட்டு படப்பிடிப்புக்கு போயிருந்த போது காதல் மலர்ந்ததாக நடிகர் கலை வேந்தன் பேட்டியில் குறிப்பிட்டார். அவர் புது மனைவியோடு தன் வீட்டுக்கு வந்ததும் அவரது முதல் மனைவி வைதேகி இருவருக்கும் ஆரத்தி எடுத்து வரவேற்றதும் செய்தியாக வந்திருந்தது. வைதேகி தன் முதல் படத்தில் நடிகர் கலை வேந்தனுடன் நடித்தாள். அதற்கு பிறகு நடிக்கவில்லை. அந்த படம் தோல்வி அடைந்ததால் அவளை யாருக்கும் தெரியாமல் போய்விட்டது. தன் கணவனை பார்த்து ''ஆமாம் அவன் மூனு கல்யாணம் பண்றான். நீ ஏழு கல்யாணம் பண்ணு''என்று கண்ணம்மா கோபப்பட்டாள்.

கிருஷ்ணபுரத்தின் பெரிய வீதியில் கோயில் பிரசாதத் தூக்குடன் நடந்து வந்தாள் ராதா. அவள் வீட்டில் ஒரு காலத்தில் வெளி வேலைகள் செய்து வந்த கண்ணம்மா, எதிரே வந்தாள். இவளை பார்த்ததும்,

''ராதா நல்லாருக்கியா''

''இருக்கேங்க்கா. பாப்பா நல்லாருக்காளா''

கண்ணம்மா ராதாவை கொஞ்சம் ஓரமாக அழைத்து போனாள். ''என்னம்மா சாப்பிடவே மாட்டியா. இப்படி எலும்பா இருக்கியே. உன்னை வச்சு பட்டர் குடும்பமே சாப்பிடுது. நீ இப்படி இருந்தா எப்படி'' என்றாள்.

ராதா சிரித்தபடி, ''அக்கா எனக்கு தபால் ஆபிசுல வேலை கெடச்சிருக்கு'', என்றாள்

*‘‘அப்படியா எப்படிம்மா. அது மத்திய சர்க்கார் வேலை ஆச்சே? .யாராவது ஒங்க ஊருல இருந்து சொல்லியிருப்பாங்க’’ என்றதும் ராதா தலை குனிந்தாள்.*

*‘‘சரி, நல்லா வேலை பாரு; நல்லா சாப்பிடு; உடம்பை பார்த்துக்க. இப்படி கடைவீதியில நின்னு எங்கூட நீ பேசுறதை ஒங்க வீட்டாளுக யாராச்சும் பார்த்தா ஒன்ன திட்டுவாங்க’’, என்று சொல்லிவிட்டு போய்விட்டாள்.*

*கண்ணம்மாவும் ராதாவும் பட்டர் வீட்டாருக்கு தெரியாமல் தோழிகளாக இருந்தனர். ராதாவின் அம்மா அப்பா யாரென்று அவளுக்கே தெரியாது. ஆனால் அவளுக்கு சென்னையில் இருந்து யாரோ பணம் அனுப்புகிறார்கள். அவள் இங்கே கிருஷ்ணன் கோயில் பட்டர் வீட்டில் ஆறு வயது முதல் வளர்ந்துவருகிறாள். அதனால் அவளை யாரிடமும் பேச விட மாட்டார்கள்.*

*ராதா மிகவும் ஒல்லி; சிவந்த நிறம்; நீண்ட அடர்த்தியில்லாத முடி; அவளது களையான முகத்தில் எப்போதும் சோகம் ததும்பும். அசோக வனத்து சீதை போல தூசு படிந்த ஓவியமாக காட்சி தருவாள். அவள் ஒரு நடிகையின் மகள் என்று ஊருக்குள் ஒரு பேச்சு உண்டு.*

*ராதா தன் சிறு வயது பற்றி கண்ணம்மாவிடம் மட்டும் சொல்லியிருக்கிறாள். அவள் ஒரு பாட்டி வீட்டில் இருந்தாள். அங்கு நிறைய பெண்கள் இருந்தனர். அவளுக்கு அங்கு பாட்டும் பரதமும் ஒருவர் வந்து சொல்லிக் கொடுத்தார். அதில் அவளுக்கு ஆர்வம் வரவில்லை. இது அதுக்கு சரிப்படாது என்று அடிக்கடி அங்கு சொல்லியது மட்டும் அவளுக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது. ஒரு நாள் ஒரு மாமா இவளை ரயிலில் அழைத்து வந்து பட்டர் வீட்டில் விட்டுவிட்டார். மாதந்தோறும் மணியார்டர் வரும். அதில் குழந்தை சௌக்கியமா என்று ஒரு வரி எழுதியிருக்கும். இதுதான் அவள் வாழ்க்கை சுருக்கம்.*

*ஒரு நாள் ராதா மூன்று பிள்ளைகளுடன் ஒரு காரில் ஏறியதை பார்த்த கண்ணம்மா ராதா என்று சத்தம் போட்டு கூப்பிட்டாள். ராதா திரும்பி பார்த்து சிரித்தபடி அவளிடம் வந்தாள். எனக்கு மூனு குழந்தைங்க கண்ணம்மா என்று*

*ஆசையாக சொன்னாள். அடுத்த ஊரில் வசிப்பதாகச் சொன்னாள். இப்போது ஆள் சற்று குண்டாக மகிழ்ச்சியாக காணப்பட்டாள். கண்ணமாவ ஒரு நாள் எங்க வீட்டுக்கு வா எங்க வீட்டுக்காரரர் ரொம்ப நல்லவர். அவர் உன்னைய ஒன்னும் சொல்ல மாட்டார் என்றாள். தாயில்லாத அவளின் தாய்மைப்பண்பு கண்ணம்மாவின் கண்ணில் கண்ணீரை வரவழைத்தது.*

*கண்ணம்மா மகிழ்ச்சியாக வீடு திரும்பினாள். அவள் கணவன் நடிகர் கலை வேந்தன் மாரடைப்பால் இறந்த செய்தியை சொல்லி வருத்தத்தோடு மாலை பேப்பரை காட்டினான். பார்த்தாள். அதில் கலை வேந்தன் ஜோடி ஜோடியாக மூன்று மனைவியரோடு இருந்தார். அதில் அவரது முதல் மனைவி வைதேகியை நளாயினி என்றும் தன் கணவரின் மகிழ்ச்சியே தன் மகிழ்ச்சி என்று வாழ்ந்தவர் என்றும் பாராட்டி எழுதியிருந்தனர். கலை வேந்தனும் வைதேகியும் திருமணம் முடித்த போது எடுத்த போட்டோவும் இருந்தது. அந்த போட்டோவில் வைதேகி அருகில் நின்று கொண்டிருந்தவரின் முகம் அவளுக்கு தெரிந்த முகமாக தோன்றியது. ஆம்; கண்டுபிடித்துவிட்டாள். அவர் அடிக்கடி பட்டர் வீட்டுக்கு வருவார். கண்ணம்மாவுக்கு பொறி தட்டியது. மீண்டும் அந்த 'நளாயினியின்' முகத்தை உற்று பார்த்தாள். அவள் முகத்தில் தன் தோழியின் முகம் டபுள் எக்ஸ்போஷர் ஆயிற்று.*



# *9. பட்டிக்காடா பட்டணமா*

*இன்றைக்கு தவமணி அக்காவின் போக்கு சற்று விசித்திரமாகத்தான் தோன்றுகிறது. காலையில் பத்தரை மணிக்கே வந்து தேனப்பன் சார் முன் உட்கார்ந்தவர் மணி பன்னிரெண்டு ஆகியும் அந்த இடத்தை விட்டு நகரவில்லை. இரண்டு மூன்று நாட்களாகவே இப்படித்தான் வந்து அமர்வதும் பின்பு சற்று நேரம் நிற்பதும் கொஞ்சம் சத்தமாக பேசுவதும் கொஞ்சம் ரகசியமாக பேசுவதும் என நாட்களை கடத்திக் கொண்டு இருக்கிறாள். அந்த அக்கா இப்போது வேலை எதுவும் செய்வதாக இல்லை. வேலை எல்லாம் பெண்டிங் ஆக இருக்கிறது. ஆனால் சீட்டில் இருப்பதே கிடையாது. ஐந்து நிமிடம் சீட்டில் இருந்தால் அரை மணி நேரம் ராஜா சார் முன் நின்று தீவிரமாக எதையோ டிஸ்கஸ் செய்து கொண்டிருப்பாள்.*

*நான் கிராமத்தான். இந்த மாநகரத்தின் போக்குகள் எனக்கு இன்னும் பிடிபடவில்லை. எங்கள் ஊரில் அநேகமாக நான் தான் முதன்முதலாக பட்டணத்திற்கு வேலைக்கு வந்திருக்கிறேன். நான் படித்த காலத்தில் மிகவும் கஷ்டப்பட்டு படிக்கும்போது நேர்மையாகவும் நியாயமாகவும் வாழவேண்டும் என்பதை திரும்பத் திரும்பச் சொல்லி வளர்த்தார்கள். யாராவது தப்பு செய்தால் அவர்களை தண்டிக்க வேண்டும். அவர்களை சப்போர்ட் செய்யக்கூடாது. சப்போர்ட் செய்தால் அவரும் குற்றவாளியே. என்றெல்லாம் திரும்பத் திரும்ப சொல்லி வளர்ந்ததாலோ என்னவோ என் மனதில் எங்கு தவறு நடந்தாலும் அது சுருக் சுருக்கென்று குத்தி கொண்டே இருக்கும்.*

*தவமணி அக்காவுக்கு வயது 38 இருக்கும். அவருடன் ஸ்கூலில் படித்த ஒரு அக்கா அன்றைக்கு தன் மகளுக்கு கல்யாணம் என்று இவருக்கு பத்திரிகை வைக்க வந்தார்.வயதுக்கு வந்ததோடு அந்தக்கா படிப்பை நிறுத்தி*

விட்டாராம். இப்போது தன் மகளையும் அதிகம் படிக்கவில்லை என்றார். ஆனால் இன்னும் தவமணி அக்கா அழகாக நீட்டாக ட்ரஸ் பண்ணிக்கொண்டு வேலைக்கு வந்து கொண்டிருக்கிறார். மாப்பிள்ளை தேடிக் கொண்டிருக்கிறார். தன் வீட்டாரோடு சண்டை பிடித்துக் கொண்டு இங்கு வேலைக்கு வந்து விட்டார். அவருக்கு ஒரே ஒரு தம்பி; அவர் அதிக காலம் அக்காவுக்கு கல்யாணம் முடியட்டும் என்று காத்திருந்து விட்டு பின்பு ஒரு நாள் தான் லவ் பண்ண பொண்ண திருமணம் செய்து கொண்டு வந்து நின்று விட்டார். தவமணி அக்காவுக்கு ஒரே கோபம். தம்பியோடு சண்டை பிடித்துக் கொண்டு 'இனி நான் இந்த வீட்டுக்கு வரமாட்டேன்' என்று சொல்லிவிட்டு இங்கே ஒரு ஹாஸ்டலில் தங்கி படித்து வேலை பார்த்துக் கொண்டிருக்கிறார்.

இது ஒரு தனியார் நிறுவனம். இங்கு முதலாளிக்கு சம்பளத்தை விட வேலைதான் முக்கியம். ஆனால் இங்கு வேலை பார்ப்பவர் எல்லோரும் அதிகபட்சமாக குறைந்த அளவு வேலை பார்க்கின்றனர். அதாவது இதை விட குறைவாக இனி வேலை பார்க்க முடியாது என்ற கருதும்படி மிக மிகக் குறைவாக வேலை பார்க்கின்றனர். முதலாளியும் மானக்கேடாக ஒவ்வொருத்தரையும் பேசுகிறார். இவர்கள் பார்க்கும் வேலைக்கு சம்பளம் ஒரு கேடா என்று கெட்ட வார்த்தை சொல்லி திட்டுகிறார். ஆனால் எவருக்கும் அது உறைத்ததாக தெரியவில்லை. திடீர் திடீரென்று ஆட்கள் வேலையை விட்டு நின்று விடுகின்றனர். இங்கு யாருக்கும் முதலாளிகளிடம் விசுவாசம் கிடையாது. வேலையிலும் பற்று கிடையாது. பிறகு என்ன மண்ணாங்கட்டிக்கு இவர்கள் வேலைக்கு வருகிறார்கள். வீட்டிலேயே இருக்க வேண்டியதுதானே? எனக்கு இந்த பட்டணத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

வேலை நன்றாக செய்து நல்ல பெயர் வாங்க வேண்டாம். ஏனென்று கேட்டால் முதலாளி சம்பளம் தர மாட்டான். அவனுக்கு எதற்கு வேலை பார்க்க வேண்டும் என்று என்னிடம் சண்டைக்கு வருகிறார்கள். ஏதாவது ஒரு தவறு கண்டுபிடித்து நிர்வாகத்தையும் முதலாளியையும் திட்டுவதே இவர்களுக்கு வாடிக்கையாக போய் விட்டது.

இப்போது இன்னும் சில மோசமான காரியங்களும் தொடங்கிவிட்டன. இப்படி ஒரு தவறு நடப்பதாகவே எவரும் கண்டுகொள்வதில்லை.

தேனப்பன் சாருக்கு வயது என்ன தெரியுமா? அவர் ரிட்டையர் ஆகி மூன்று வருடம் ஆகிவிட்டது. அவர் பென்ஷன் வாங்கிக் கொண்டு சும்மா பொழுது போகாமல் இங்கே வந்து உட்கார்ந்து வேலை செய்வதாக சொல்லிக்கொண்டிருக்கிறார். முதலாளியின் அப்பாவிற்கு இவர் ஃபிரண்ட் அதனால் அவர் அப்பா ரெகமண்டேஷனில் வந்து இங்கு உட்கார்ந்திருக்கிறார். தவமணி அக்காவுக்கு அவர் மகள். ஆனால் அவர் தவமணி அக்காவோடு கொஞ்சிக் கொண்டிருக்கிறார் இந்த அக்காவும் இந்த கிழவனிடம் போய் என்னேரமும் பேசிக்கொண்டிருக்கிறது. எனக்கு இவர்கள் இருவரையும் கொஞ்சம் கூட பிடிக்க. வேலை நேரத்தில் இப்படி இவர்கள் நடந்து கொள்வது இவர்கள் மேல் எனக்கு பெரும் வெறுப்பை ஏற்படுத்தியது.

இந்த அறையில் நாங்கள் எட்டு பேர் இருக்கிறோம். மீதி ஐந்து பேரும் எதுவுமே நடக்காதது போல அவர்கள் பாட்டுக்கு எதையோ செய்து கொண்டிருக்கிறார்கள். தவமணி அக்காவை கூப்பிட்டு யாரும் கண்டித்து அதற்கு புத்திமதி சொல்வது கிடையாது. நான் அவர்களை விட பத்து வயது இளையவன். நான் எப்படி அவர்களிடம் இதுபற்றி பேச முடியும். தேனப்பன் சார் மிக மிக மூத்தவர். அவரிடமும் என்னால் பேச இயலாது. யாரிடம் என்ன பேசவேண்டும் என்று ஒரு வரம்பு இருக்கிறது இல்லையா? அந்த வரம்பை மீறி பேசலாமா? இது என்ன கெட்டும் பட்டணம் சேர் என்பார்கள். ஆனால் பட்டணம் வந்து தான் பாதி பேர் கெட்டுப் போகிறார்கள்.

தவமணி அக்காவோட அம்மா ஒரு ஸ்கூல் டீச்சர். அவர்கள் அவ்வப்போது தாமாகவே வந்து பார்த்து விட்டு அழுது கொண்டே போவார்கள். ஆனால் தவமணி அக்கா ‘போ போ உன் மகனோடு போயிரு. அவன் ஒருத்தியை கூட்டிட்டு வந்து இருக்கான். அவள் பெத்த புள்ளைய எப்போவும் கொஞ்சு போ’ என்று திட்டுவார்கள். அவர்களும் எத்தனையோ மாப்பிள்ளை பார்த்தார்கள். ஆனால் இந்த

அக்கா ஏதாவது ஒரு குறை சொல்லி மறுத்துவிட்டார். இப்போது இந்த கிழவனிடம் வந்து நிற்க வேண்டிய நிலைமை இவர்களுக்கு ஏற்பட்டு விட்டது. எனக்கு கொஞ்சம் பயமாக இருக்கிறது.

இந்த கிழவன் ஒரு ரூம் எடுத்து தங்கி இருக்கிறார். அங்கு தவமணி அக்காவை கூட்டிக் கொண்டு போய் ஏதாவது செய்து விட்டால் என்ன செய்வது? தவமணி அக்காவுக்கு இந்த ஆபத்து தெரியாமலா இருக்கும்? அல்லது தெரிந்து கொண்டே தெரியாதது போல் பேசுகிறாரா. அல்லது அவருக்கு முழு சம்மதம் தானா? ஒன்றுமே புரியவில்லை ஏதாவது தப்பு தண்டா ஆகிவிட்டால்... பின்பு தவமணி அக்காவை யார் திருமணம் செய்து கொள்வார்?

அக்காவை பார்க்கும் போதெல்லாம் எனக்கு யாரோ நீர்ச்சுழிக்குள் சிக்கி கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே மூழ்கிக் கொண்டு போவது போல் தெரிகிறது. ஒருநாள் நான் முதலாளி அம்மாவை பார்த்து இந்த விஷயத்தை மெதுவாகச் சொன்னேன். நீங்கள் தான் தவமணி அக்காவுக்கு நல்ல மாப்பிள்ளை பார்த்து திருமணம் செய்து வைக்க வேண்டும். இல்லையென்றால் அவர்கள் வாழ்க்கை ஆபத்தில் முடிந்துவிடும் என்று அவர்களிடம் என் பயத்தை எடுத்துரைத்தேன். மறுநாள் நான் வேலைக்கு வந்ததும் தவமணி அக்காவை பார்த்தேன். சீட்டில் அவள் இல்லை.

கொஞ்ச நேரம் கழித்து அவரும் அந்த சாரும் உள்ளே வந்தார்கள்.அவர்கள் எங்கேயோ போய் காப்பி குடித்துவிட்டு வந்தார்கள் என்று நினைக்கிறேன். நாங்கள் காபி குடிக்கும் கடையில் அவர்கள் குடிக்க மாட்டார்கள் நாலு கடை தள்ளிப்போய் அங்கு ஆற அமர உட்கார்ந்து சிரித்துப் பேசி குடித்துவிட்டு அரை மணி நேரம் கழித்து வருவார்கள். அவர்கள் இருவரும் சிரித்துக் கொண்டே உள்ளே வந்தார்கள். ஒரு பத்து நிமிடம் கழித்து மேனேஜர் அவர்களை அழைத்தார். தவமணி அக்கா உள்ளே போய்விட்டு வந்து தேனப்பன் சாரிடம் ஏதோ முணுமுணுவென்று கூறிவிட்டு போய் தன் சீட்டில் உட்கார்ந்து விட்டார்கள்.

நான் வழக்கம் போல் மத்தியானம் மெஸ்ஸில் சாப்பிட்டுவிட்டு இரண்டு மணிக்கு வந்து விட்டேன். இங்கே

ஒருவரையும் காணவில்லை. என்ன ஆயிற்று? எனக்கு எதுவும் புரியவில்லை. பிறகு மெதுவாக ஒவ்வொருவராக வந்து தன் இருக்கையில் அமர்ந்தனர். திடீரென தேனப்பன் சார் எழுந்து போய் எனக்கு நேர் எதிரில் இருக்கும் சர்மாவிடம் ஏதோ ரகசியமாய் சொல்லிவிட்டு அங்கு நின்று கொண்டு ஏதோ கோபமாக கத்தி பேசி கொண்டிருந்தார். அவர் என்ன பேசுகிறார் என்பதும் ஆரம்பத்தில் எனக்கு புரியவில்லை. நான் நிமிர்ந்து பார்த்தேன். சர்மா தலையை ஆட்டிக் கொண்டே இருந்தார். அவர் தலையாட்டியதைப் பார்க்கும்போது நிச்சயமாக தேனப்பன் சார் அவரை திட்டவில்லை என்பது தெரிந்தது. பின்பு யாரைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறார் என்று எனக்கு ஒரு சந்தேகம் வந்தது. குனிந்து வேலையை பார்த்துக் கொண்டே தொடர்ந்து அவர் பேசுவதை கவனித்தேன். அவர் என்னைத் தான் திட்டி கொண்டு, நான் போய் முதலாளி அம்மாவிடம் சொல்லி அவர்களைப் பற்றி வத்தி வைத்துவிட்டதாக கத்திக் கொண்டிருந்தார். அவர் தான் செய்த தவறை நியாயப்படுத்தி கொண்டிருந்தது எனக்கு கசப்பாக இருந்தது. முதியோர் காதல் என்றுதான் வைத்துக் கொள்ளேன் உனக்கு ஏன் காய்கிறது? நீ உன் வேலையை பார்த்துக் கொண்டு போக வேண்டியதுதானே? நாங்கள் எப்படி இருந்தால் உனக்கு என்ன? நீ என்ன முதலாளிக்காபிறந்திருக்கிறாய் என்றெல்லாம் கேட்டு கொண்டிருந்தார்.

எனக்கு சங்கடமாக இருந்தது. யாராவது எனக்கு ஆதரவாகப் பேசுவார்கள் என்று நிமிர்ந்து பார்த்தேன். எல்லோரும் என்னை வெறுப்பாகப் பார்த்தார்கள். நான் எழுந்து வெளியே வந்துவிட்டேன். சிறிது நேரம் கழித்து உள்ளே வந்து உட்கார்ந்தேன். தவமணி அக்காவும் இருக்கையில் இல்லை. இன்னொருவர் மெல்ல என் அருகில் வந்தார். "என்ன தம்பி நீ விவரம் தெரியாத பையனா? நீ படிச்சவன் தானே? இப்படி செய்யலாமா? கிராமத்துக்காரன் மாதிரி பண்றீங்க? அடுத்தவங்க விஷயத்துல நம்ம ஏன் தலையிடனும்? அது அசிங்கம் இல்லையா? கொஞ்சம் கூட உனக்கு நாகரீகமே தெரியலயே? நம்ம வேலையை தான் நம்ம பார்க்கலாமே தவிர அடுத்தவங்களை பற்றி நாம்பேசக் கூடாது. இது மகா தப்பு என் கிட்ட இப்படி நீ நடந்திருந்தால் நான் எடுக்கிற ஸ்டெப்ஸே வேற மாதிரி இருக்கும். நான்

உன்னாண்ட நடந்துக்கிற முறையே வேற மாதிரி இருக்கும். ஏதோ தேனப்பன் சார் பாவம் வயசான மனுஷன் பொலம்பிட்டு போறாரு. உனக்கு என்ன வந்துதாம் தவமணி உன் கூடப் பிறந்துதா? நீங்க பண்றது மகா தப்பு.

உனக்கு என்ன பொறாமை? இந்த பொறாமை ஆகாது தம்பி? நீ வளர வேண்டிய பையன். நீ இந்த மாதிரி அடுத்தவங்க சந்தோஷத்தைப் பார்த்து வைத்து வயிறு எரியக்கூடாது. வந்தால் வேலையை பார்க்கனும் பின்ன வீட்டுக்கு போனோம் என்று இருக்கணும். அத விட்டுட்டு அவங்க என்ன பண்றாங்க இவங்க என்ன பண்றாங்கன்னு வேவு பார்க்கக் கூடாது. இது என்ன கேடு கெட்ட புத்தி உனக்கு. போட்டு கொடுக்கிறது.எதுக்கு போய் முதலாளியம்மாவாண்டை போட்டு கொடுத்த? முதலாளியம்மா உனக்கு வேண்டியதா? அந்தம்மாவை சந்தோஷப்படுத்தனும்னு நினைக்கிறியா? இது கேவலமா இல்லையா? நீ படிச்சவன் தானே? படிச்சவன்மாதிரி கவுரவமாக இருக்கத் தெரியல? இதோட இந்த தப்பை விட்டுடு.நீ என்னைக்கும் வாழ்நாள்ல செய்யாத"என்று என்னை கேவலமாக பேசிவிட்டு போய் விட்டார்.

அதுவரை நின்று கொண்டிருந்த அவன் மெல்ல உட்கார்ந்தேன். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் என்ன தவறு செய்தேன்? அவர்கள் போகும் பாதை சரியல்ல; அவர்கள் தவறான பாதையில் போகிறார்கள்; அவர்களை திருத்த வேண்டும் என்று தானே நான் முயற்சி எடுத்தேன். இதில் தேவையில்லாத கற்பனைகளை எல்லாம் இவர் சேர்த்துப் பேசுகிறார். பொறாமைப்பட என்ன இருக்கிறது. தவமணி அக்கா என்னை விட பத்து வயது மூத்தவர். அவரைப் பார்த்து நான் ஏன் பொறாமைப்படப் போகிறேன்? படித்தவனா என்று கேட்கிறாரே? படித்தவன் என்றால் அடுத்தவன் தப்பு செய்வதைத் தட்டிக் கேட்கக்கூடாதா? அடுத்தவன் எப்படி நாசமாப் போனாலும் வேடிக்கை பார்த்துக்கிட்டே இருக்கணுமா? சமூக அக்கறை,சமூக ஆர்வம் இதெல்லாம் இங்கு இருக்கக்கூடாதா? அதுக்குத்தான் படிக்கிறது?

*இவங்க எல்லாம் வேடிக்கை பாத்துக்கிட்டு இருக்காங்க. என்ன பார்த்துகிட்டு நீ படிச்சவனா? நாகரீகம் தெரிஞ்சவனான்னு கேக்குறாங்க. இரண்டு பேர் கெட்டு போறது ரெண்டு பேரும் தப்பு பண்றதை வேடிக்கை பாக்குறவன் தான் நாகரீகமானவனா? அவர்களை தட்டிக் கேட்டு அவனை நல்ல வழியில் நடத்த வேண்டாமா? என்ன கேவலமான பட்டணத்துவாழ்க்கை, பட்டணத்து தர்மம்? இது பட்டணத்தில் தான் இப்படி இருக்கா? இல்ல எல்லா இடத்துலயும் இப்படித்தான் இருக்கா? என்று என் மனதுக்குள் நினைத்தபடி உட்கார்ந்திருந்தேன்.*

*யாருமே எனக்கு ஆதரவாக பேசவில்லை. நிமிர்ந்து எல்லோர் முகத்தையும் ஒருமுறை கூர்ந்து பார்த்தேன். எல்லோருமே என்னை திட்டுவது போல தான் தெரிந்தது.எனக்கு தேவை இல்லாத வேலையில் நான் தலையிட்டு விட்டதாகஅவர்கள் கருதுவது எனக்கு புரிந்தது.*

*இது சரிப்படாது. இனி இந்த அலுவலகத்தில் நாம் வேலை பார்க்கக் கூடாது. இது ஒரு நச்சு கூடாரம். நல்ல பாம்பும் கருந்தேளும்ஒருங்கே கூடி புழங்குகின்ற இடமாக தான் எனக்கு இந்த அலுவலகம் தெரிந்தது. நல்ல மனிதர்கள்தொண்டுள்ளம் கொண்டவர்கள் வாங்கும் சம்பளத்துக்கு முறையாக வேலை செய்பவர்கள் எவரும் இங்கு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இப்படிப்பட்ட ஆட்களோடு சேர்ந்து நான் வேலை பார்த்தால் இன்னும் சில ஆண்டுகளில் என் மனசாட்சியை விற்று விட்டு நான் என்னென்ன தவறுகளுக்கு ஆதரவாக ஊக்கமளிக்க கூடியவனாக மாறிவிடுவேனோ தெரியவில்லை. நான் மெல்ல மெல்ல அந்த அலுவலகத்தை விட்டு விலகிக் கொண்டே வந்தேன். இரண்டு நாட்களில் எனக்கு மனதில் மிகுந்த தெளிவு ஏற்பட்டு விட்டது*

*பஸ் ஏறி கிளம்பி விட்டேன். பஸ் நகரத் தொடங்கியது என் சொந்த ஊருக்கு. அங்கு வாழும் வெள்ளந்தியான மக்கள், நல்லது மட்டுமே நடக்க வேண்டும் என்று தினமும் இறைவனை பிரார்த்திக்கின்றனர்.நல்லவனாக வாழ வேண்டும் என்பதற்காக வாட்டி எடுக்கும் வறுமையையும் தாங்கிக்கொண்டு உழைத்து ஓடாகத் தேய்ந்து*

கொண்டிருக்கும் அந்த மக்களைத் தேடி என் ஊருக்கு திரும்பிக் கொண்டிருக்கிறேன்.என் ஊரில் ஏழைச் சிறுவர்களுக்கு படிப்பு சொல்லிக் கொடுத்து விவசாயம் செய்து பிழைத்துக்கொள்வேன். நான் பட்டணவாசியாக அவர்களின் நாகரிகம் தெரிந்தவனாக இருப்பதை விட கிராமத்துவாசியாக பண்பாடு தெரிந்தவனாக வாழ்வதே சரி. ஜன்னல் வழியாக பார்க்கிறேன். பட்டணம் பின்னோக்கி போய் கொண்டிருக்கிறது. . .



# *10. பிருந்தா ஹாஸ்டல்*

*கலாவின் காதுக்குள் வந்து அவள் கணவன் ஏதோ சொல்லியதும் அவள் சீ என்று எரிந்து விழுந்தாள். அவள் முகத்தை பார்த்ததும் பாலுவுக்கு அருவருப்பாக போய்விட்டது.*

*என்ன கேட்டுவிட்டோம் என்று இப்படி கத்தினாள்.*

*“ராத்திரி முழுக்க பாலா பாலான்னு கொஞ்சுறா, காலைல வெலகி வெலகி ஓடுறா. என்ன ஆச்சு இவளுக்கு. இன்னைக்கி ராத்திரி வாடி ஒனக்கு இருக்கு தீபாவளி” என்று மனதிற்குள் கறுவிக்கொண்டே சாப்பிடாமல் ஆபிசுக்குப் போய்விட்டார்.*

*கலா பிருந்தாவை ஸ்கூலுக்கு அனுப்பிவிட்டு வந்து சோபாவில் அமர்ந்தாள். டிவியை போட்டாள். ஆசை முகம் படத்தில் இருந்து “நீயா இல்லை நானா” பாட்டு பாடியது. அன்றோரு நாள் ஆலம்பட்டி கிராமத்தில் இந்த பாட்டை ஒரு டீக்கடையில் நின்று முழுசாக பார்த்து ரசித்தாள் ஏதோ அவளுக்காகவே எழுதப்பட்டது போல தோன்றியது. ஆமாம் மறு முறை வரும்வரை மயக்கத்தில் இருந்தது அவள் தானே?*

*“பாவம் பிருந்தாப்பா. அவரிடம் இப்படி கத்தியிருக்க வேண்டாம். ஆனால் பகலில் இப்படி பேசினால் எனக்கு கோபம் தான் வருது”.*

*திருமணம் முடிந்த மறுநாள் உறவுக்காரி ஒருத்தி ஒன் ஹஸ்பண்டை நாங்க எல்லோரும் மணின்னு தான் கூப்பிடுவாங்க. அவன் ஃபிரெண்ட்ஸ் பாலுன்னு கூப்பிடுவாங்க. ஆனா நீ ‘பாலா’ன்னு கூப்பிடுறது ரொம்ப ஸ்டைலா இருக்குடீ என்றாள்.*

*நான் எப்போ அப்படி கூப்பிட்டேன்.*

*இப்போ நீ கண்ணை மூடிக்கிட்டே அப்படி ரெண்டு தடவை கூப்பிட்டியே.*

அப்படியா என்று அதிர்ந்தாள்

இவர் பேர் என்ன என்றாள் கலா.

அடி பாவி புருஷன் பேர் தெரியாதா அவன் பேரு பாலசுப்ரமணியன் என்றாள். கலா திரும்பவும் கண்ணை மூடிக் கொண்டாள். அவள் தன் கல்யாண பத்திரிகையை கூட பார்க்கவில்லை. மாப்பீள்ளை பேர் மணி என்று சொல்வதை மட்டும் கேட்டிருக்கிறாள். எப்படி இந்த வீட்டுல வாழ போறேன் கடவுளே என்று மனதுக்குள் குமைந்தாள்.

அந்தக் காலத்தில் பாலாவும் இவளும் காதலிக்கும்போது சின்ன மலை கோயிலுக்கு அடிக்கடி போவார்கள். அவன் சிவப்பாக அழகாக சுருள் முடியுடன் இருப்பான்; பூர்வீகம் கேரளா; இவளை விட வயதில் சின்னவனாக தோன்றுவான். மூன்றாண்டுகள் காதல் வானில் பறந்தாள். திருமணம் முடிக்க முடியாது என்று சொல்லித்தான் அவன் பழகினான். ஆனாலும் அவன் தனக்கு கிடைத்ததே தன் பாக்கியம் என்று நினைத்தாள்.

போன மாதம் இவளுக்கு மாப்பிள்ளை பார்க்கும்போது மாப்பிள்ளைக்கு வயது முப்பத்தியாறு என்றார்கள். ஆனால் தொப்பை போட்டு நாற்பது போல தெரிகிறது. எதுவுமே பொருத்தமில்லை. ஒரு எழவும் தெரியல. மண்ணு மாதிரி அவரு அம்மா வளர்த்திருக்கிறா.

''என் பாலா கில்லாடி. எப்பவும் ஏதாவது ஜோக் அடித்து சிரிக்க வைத்துக் கொண்டேயிருப்பான். மனசு மகிழ்ச்சியால் பொங்கி கொண்டே இருக்கும்''.

அந்த நாள் நல்லா ஞாபகம் இருக்கு. அன்று அண்ணன் தன் நண்பன் நரேந்திரனை வீட்டுக்கு அழைத்து வந்தான். அவனை பார்த்தால் பழைய நடிகர் பாலாஜி போல தோன்றினான். எனவே இவள் அவனுக்கு பாலாஜி என்று தன் மனதுக்குள் பெயர் வைத்துக்கொண்டாள்.

அவ்வளவு அழகான ஒருவனை அவள் தன் வாழ்வில் பார்த்ததேயில்லை.

அடிக்கடி வீட்டுக்கு வந்த இவன் ஒரு நாள் இவளது கல்லூரி வாசலில் வந்து நின்றான். அவளை வா என்று சொல்லிவிட்டு முன்னால் நடந்தவன் பஸ்ஸில் ஏறி ஒரு இடத்தில் இறங்கி அங்கு ஒரு சந்துக்குள் திரும்பினான். இவளும்

*திரும்பினாள். சிறிது தூரத்தில் ஒரு படிக்கட்டு வந்தது. அவன் ஏறினான் இவளும் ஏறினாள். அது தான் இவன் தங்கி படிக்கும் பிருந்தா ஹாஸ்டல் என்பது தெரிந்தது. இது பின் வாசல். அவன் அவளை தன் அறைக்குள் அழைத்து சென்றான். ஐந்து மணிக்கு வெளியே அழைத்து வந்து பஸ் ஏற்றி விட்டான்.*

*பிருந்தா ஹாஸ்டல் அவள் வாழ்வில் மறக்க முடியாத இடமாகிவிட்டது இப்படியே இரண்டு வருடங்கள் போய் வந்தாள். எந்த பிரச்சனையும் வராமல் அவன் பாதுகாப்பாக நடந்துகொண்டான்.*

*திருமணம் முடிக்க மாட்டான் என்று தெரிந்தும் இவள் இப்படி தன்னை அவனிடம் இழந்துகொண்டே இருந்தாள். திருமணமே வேண்டாம் என்று தன் வீட்டில் சொல்லி இருந்தாள். ஆனால் அம்மா இவளுக்கு இந்தக் கல்யாணத்தை ஏற்பாடு செய்துவிட்டாள்.*

*அவளுக்கு இரவில் பாலாவின் நினைவு வருவதை தவிர்க்க முடியவில்லை. நல்ல வேளை இவர் பெயரும் பாலு என்றிருந்தது. தன் கணவரை பாலா என்று இரவில் அழைத்தாள். பகலில் அவரை யாரோ போல நடத்தினாள். இவளால் இந்த இரட்டை வாழ்க்கையை தவிர்க்க முடியவில்லை.*

*'வாழ்ந்தாக வேண்டும் வா வா பாலா' என்று பாடுவாள்.*

*இன்றிரவு பாலாவை நினைக்கக்கூடாது என்று ஒவ்வொரு நாளும் முடிவு செய்வாள். ஆனாள் இரவில் அவள் கணவரை கண் கொண்டு காண இயலாது. அவர் பேசுவதும் சகிக்க முடியாது. செத்து போய்விடலாம் போலிருக்கும். விளக்கை அணையுங்கள் என்று கட்டாயப்படுத்துவாள். அவரை முற்றிலும் தவிர்க்க விரும்பினாள். அவரை எந்த வகையிலும் அவளால் ரசிக்க முடியவில்லை. இதற்கு ஒரே வழி இரவில் பாலாவுடன் கற்பனையில் வாழ்வது தான் என்று முடிவு செய்துவிட்டாள்.*

*இரவில் கணவனை பாலா பாலா என்று கொஞ்சுவாள்; பகலில் முறைப்பாள். இந்த போராட்டம்*

*அவளுக்கு செட்டாக ஒரு வருடம் ஆயிற்று. அதற்குள் ஒரு பெண் குழந்தை பிறந்தது. பகலில் கடமையும் இரவில் காதலுமாக அவள் வாழ்க்கை ஓடியது.*

*பிருந்தா ஹாஸ்டல் பெயரையே தன் குழந்தைக்கும் வைத்தாள்.*

*அன்றும் இன்றும் பிருந்தா தான் இவளுக்கு சந்தோஷம். அவளால் மட்டுமே இன்று குடும்பத் தேர் ஓடுகிறது.*



# *11. யாரும்மா மைனரு?*

*முனியன் மஞ்சனத்தி மரத்தினடியில் நின்றிருந்தான். காலை மணி பத்து. தொண்டு நிறுவனத்துக்கு வேலைக்கு வருவோர் அவனை வினோதமாக பார்த்துக்கொண்டே அவசரமாக உள்ளே நுழைந்து பையோ பன்ச் வைத்தனர். அவன் கைலியை பின்பக்கம்  ஏற்றி கட்டியபடி ஏதோ நினைப்பில் ஒரு குச்சியை மென்ற படி நின்றிருந்தான். யாரை பார்த்தும் அவன் கைலியை இறக்கிவிடவில்லை. வணக்கம் சொல்லவில்லை. அப்பா வந்து கூட்டிக்கொண்டு செல்வதாக சொன்னாரே இன்னும் வரவில்லையே என்ற கவலையோடு இருந்தான்.*

*டார்லிங் செல்வி வியர்க்க வியர்க்க நடந்து வந்தாள். அவள் அந்த தொண்டு நிறுவனத்தின் களப்பணியாளர். தென் மாவட்டத்தை சேர்ந்தவள். எங்கு அநியாயம் நடப்பதாக தெரிந்தாலும் அவசர அவசரமாக ஓடிப் போய் நியாயம் கேட்டு பாதிக்கப்பட்டவருக்கு உதவுவாள். இரவு பகல் பார்க்காமல் பயணிப்பாள். வெயில் மழையிலும் அசர மாட்டாள். கடும் உழைப்பாளீ. முனியனைப் பார்த்ததும் ‘என்ன முனியா இங்கே நிக்குற? சாப்பிட்டியா உள்ள வா’ என்ற படி ஓடிப்போய் அவளும் பன்ச் வைத்தாள். மணி பத்து பத்து.*

*முனியன் உள்ளே சென்றான். அன்று பத்திரிகையாளர் சந்திப்பு நடந்தது. டார்லிங் செல்வி முனியனை கொத்தடிமை என்று அறிமுகம் செய்து வைத்தாள். அவன் தந்தை ஐம்பதாயிரம் விலை பேசி பத்தாயிரம் முன்பணம் வாங்கியதாக ஆவேசத்துடன் எடுத்துரைத்தாள். கொத்தடிமை சட்டத்தின் கீழ் பணம் கொடுத்தவரை கைது செய்ய உரிய நடவடிக்கையை தங்கள் வழக்கறிஞர் குழு எடுத்திருப்பதாக உரைத்தாள். முனியனோடு இன்னும் இரண்டு ஆண்களும் பெண்களும் காட்டில் மாடு மேய்த்து வருவதாகவும் குறிப்பிட்டாள். இவர்கள் ஐவரும்*

*மைனர் என்பதால் வழக்கு இன்னும் சூடு பிடித்தது. பத்திரிகையாளர் அவனிடம் சில கதைகளை கேட்டு எழுதிக்கொண்டர்.*

*முனியனை பற்றி கேள்விப்பட்டு அவன் வீட்டுக்கு டார்லிங் செல்வி போனபோது. அவன் அம்மா 'தாயி என் கண்ணுக்கு இந்த அய்ப்பசி வந்தால் பதினாறு வயசாகுது. பச்ச மண்ணு. படிச்சுக்கிட்டிருந்த பையனை இந்த மனுசன் மாடு மேய்க்க அனுப்பிட்டார்'. என்று அழுதாள். முனியனின் அப்பா, 'அம்மா! படிக்கிற பையனை மாடு மேய்க்க அனுப்ப எனக்கு மட்டும் ஆசையா? அவனுக்கு படிப்பு வரல. எட்டாப்பு பெயிலாயிட்டான். வெவசாயம் இல்லை. கந்து வட்டிக்கொடுமை. நான் என்ன செய்வேன். மூனு மாசம் ஆச்சு என் மகன் முகத்தை கூட பார்க்கல. வாங்கின காசை அப்படியே கடன்காரனுக்கு வட்டிக்கு கொடுத்துட்டேன்' என்று அழுதார். அவரிடம் முனியனை கொத்தடிமையாக பணம் கொடுத்து வாங்கியவரின் முகவரியை பெற்றுக்கொண்டாள்.*

*மறு நாள் அலுவலகத்தில் வந்து தகவல்களைச் சொல்லிவிட்டு டார்லிங் செல்வி கரட்டுப்பட்டி கிராமத்துக்கு சென்றாள். ஊர்ப் பெரியவரின் வீட்டுக்கு போனாள் அவர் செய்த அநியாயத்தை எடுத்து சொன்னாள். அவர் கொஞ்சமும் அலட்டிக்கொள்ளாமல் தன் பக்கத்து நியாயத்தை எடுத்துரைத்தார்.*

*"உங்க பேர் என்னம்மா சொன்னீங்க. செல்வியா. சரி செல்வியம்மா மாசத்துக்கு ஆயிரம் ரூபாய் முனியனுக்கு சம்பளம் பேசினேன். பன்னெண்டு மாசத்துக்கு எவ்வளவு பன்னெண்டாயிரம். சரியா? அதையே முன்பணமா மொத்தமா குடுத்தா கொஞ்சம் சலுகை உண்டு. அது தான் பத்தாயிரம். சரியா? அதாவது இப்ப பெரிய பெரிய கம்பெனியில அப்ஃபிரண்டா கொடுக்குறாங்களே அது மாதிரி இது" என்றார். செல்வி, "ஐயா அவன் மைனர் அவனை நீங்க வேலைக்கு வச்சது தப்பு நாங்க உங்க மேல வழக்கு போடுவோம்".*

*அவனா சின்ன பையன் ரெண்டு மாசம் கழிச்சு வாங்க. அவன் ரெண்டு குட்டி போட்டிருப்பான்.*

என்று சொல்லிவிட்டு பெரியவர் வீட்டுக்குள் போய்விட்டார்.

டார்லிங் செல்விக்கு கோபம் பொத்துக்கொண்டு வந்தது. பாவம் மைனர் பையனை கொத்தடிமையா வச்சுக்கிட்டு பேச்சை பாரு. என்ன ஆணவம். இந்த ஆளை சும்மா விடக் கூடாது, என்று பொருமிக்கொண்டே வந்தாள்.

அந்த கடும் வெயிலில் தனியாகமேய்ச்சல் காட்டுக்கு போனாள். உச்சி வெயிலில் பெண்கள் அந்த காட்டு வழியாக போக பயப்படுவார்கள் ஆனால் பாவம் பேய் தான் இவளை கண்டு பயப்படும். அப்படி அஞ்சாமல் விறுவிறுவென்று நடந்து போனாள். முனியனை தேடி பிடித்து அவனிடம் அவன் அப்பா அம்மாவை பார்த்த விஷயத்தை சொன்னாள். அவனை மேற்கொண்டு படிக்க வைக்கிறேன் நல்ல வேலை வாங்கி தருகிறேன் என்று சொல்லி அவனை அழைத்துக்கொண்டு வந்துவிட்டாள். தொண்டு நிறுவனம் இந்த செய்தியைப் பத்திரிகையில் போட்டு கலக்கி கொண்டிருக்கிறது. ஆனால் முனியன் மட்டும் மகிழ்ச்சி இல்லாமல் இருக்கிறான்.

மேடம் வந்து முனியனுக்கு ஒரு பெரிய சார்ட் கொடுத்து கலர் பென்சில் கொடுத்து உனக்கு பிடித்த படம் வரை என்றார்கள்.

மறுநாள் அவனிடம் ஒரு நோட்டை கொடுத்து இங்கிருக்கும் புத்தகங்களை எடுத்து வாசி. உனக்கு பிடித்த விஷயங்களை இதில் எழுதி வை என்றார்கள். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை.

திடீரென்று அவன் மூலைக்கடைக்கு போய் பீடி குடிப்பதாக யாரோ சொல்லவும் உடனே அவனின் மன அழுத்தத்துக்கு கவுன்சலிங் ஏற்பாடு செய்யப்பட்டது. அவனுக்கு தனிமை ஆகாது அவனை யாராவது என்கேஜ் செய்ய வேண்டும் என்றார்கள். இதனால்அடிக்கடி அவனிடம் யாராவது பேச்சு கொடுத்தார்கள். அவனும் தன் கிராமத்தில் மாங்காய் அடித்தது கரட்டாண்டி பிடித்தது. பொன்வண்டு பிடித்தது. கிழங்கு சுட்டு தின்னது என்று பேசிக்கொண்டே இருந்தான். மதியம் சாப்பிட்டதும் வேப்பமரத்து அடியில் இருக்கும் சிமென்ட் பெஞ்சில் படுத்து தூங்கிவிடுவான்.

ஒரு நாள் மாடியில் அவனுக்கு மன நல மருத்துவர் கவுன்சலிங் கொடுத்துக்கொண்டிருந்த போது அவனுக்கு பிடித்த வாசனை வந்தது. அந்த வாசனையைப் பிடித்துக்கொண்டே கிழே இறங்கி வந்தான். அங்கே சிலர் நிறுவனத்தின் இயக்குனரைப் பார்க்க அமர்ந்திருந்தனர். திடீரென்று முனியன் பொன்னீ என்று கத்தினான். ஓடிப்போய் ஒரு பெண்ணை கட்டி பிடித்துக்கொண்டான். 'என்னாச்சு ஏம்பிள்ளை இங்க வந்த?நான் தான் வந்துருவேன்ல. எதுக்கு இங்கெல்லாம் வந்த' என்று கேட்டான். அவள் ஏதோ சொல்லி விசும்பினாள் 'அடச்சே இதுக்கா அழுகுற இங்க வா சாப்பிட்டியா' என்று அவள தோளை அணைத்தபடி கிச்சனுக்கு அழைத்து போனான்.

அங்கிருந்தவர்கள் 'யார் இது' என்று கேட்டனர். பொன்னியுடன் வந்தவர்களில் ஒருவர் 'இவன் தான் அவன்' என்றார்.

டார்லிங் செல்வி முனியன் கத்தியதை கேட்டு மாடியில் இருந்து ஓடி வந்தாள். 'என்னாச்சு யாரு நீங்கல்லாம்'.

கரட்டுப்பட்டி பெரியவர் அனுப்பினாரு. நீங்க மைனர்னு பிடிச்சு வச்சிருக்குற முனியன் அந்த பிள்ளைக்கு தாலி கட்டி குடும்பம் நடத்தியிரு கான். இந்த பிள்ளை இப்ப அஞ்சு மாசம் கர்ப்பமா இருக்கு. அதை உங்க கிட்ட சொல்லிட்டு வரச் சொன்னாரு. இதுக்கு மேலே நீங்க கேஸ் கோர்ட்டுனு போகமாட்டீங்கன்னு நினைக்குறேன்'.

"ஐயோ ரெண்டு பேரும் மைனரா"என்று கேட்டாள் செல்வி.

'யாரும்மா மைனரு?கோயில்ல வச்சு தாலி கட்டிருக்கான். அவன் மைனரா? அவன் அம்மா அப்பா பேச்சை கேட்டுக்கிட்டு நீங்க எங்க ஐயா மேலே பொய் வழக்கு போட்டிருக்கீங்க. முனியன் அப்பன் இப்படித்தான் ஒரு ஆளுகிட்ட பணத்த வாங்கிக்கிட்டு பெறகு உங்க மாதிரி ஆளுக மூலமா மகனை விடுவிச்சிருவான். பெறகு அடுத்த ஆளுகிட்ட பணத்த வாங்கிட்டு அவனை வேலைக்கு அனுப்புவான். அந்த காசு செலவானதும் உங்க மாதிரி

*ஆளுகளை பார்த்து அழுது மகனை விடுவிச்சிருவான். அவன் பெரிய பிராடும்மா'*

*விக்கித்து போய் நின்றால் செல்வி இப்படியும் செய்வார்களா? அப்போ முனியன் அம்மா சொன்னது எல்லாமே பொய்யா? ஐயோ தெய்வமே. முனியன் அப்பா வட்டி கொடுமை பற்றி சொன்னாரே அது யாருன்னு கேட்டு அந்த ஆளை கந்து வட்டி கொடுமையில பிடிக்கனும். அந்த ஆளால தான் முனியன் அப்பாவுக்கு மகனை கொத்தடிமையாக விற்க வேண்டிய நெலமை ஏற்படுது. அந்த ஆளு யார்ன்னு போய் விசாரிப்போம்' என்று முடிவு செய்தாள்.*

*பத்திரிகை நண்பர்களிடமும் சொல்லி வைப்போம் என்று அடுத்த ப்ராஜெக்ட்டுக்கு தயாரானாள்.*



# 12. வேக்காடு

இரவு மணி பத்து ஆகிவிட்டது. இன்னும் பாண்டியன் வரவில்லை. இன்றைக்கு எங்கு குடித்துக் கும்மாளமிட்டு தெருவில் தள்ளாடி வருகிறானோ தெரியாது. காதலிக்கும் போது நல்லவனாக தான் இருந்தான். எலக்ட்ரீசியன் வேலை பார்த்தான். தகப்பன் இல்லாத தேவி வீட்டு வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது அங்கு எலக்ட்ரிக்கல் கடை வைத்திருக்கும் இந்த பாண்டியனைக் காதலித்து திருமணம் செய்து கொண்டு வந்து விட்டாள். இவள் அண்ணன் இவளுக்கு கல்யாணச் செலவு செய்யவேண்டிய அவசியமில்லாமல் போய் விட்டதை நினைத்து சந்தோஷப் பட்டபடி ஒரு சண்டையை போட்டு விட்டு போய்விட்டான்.

அன்றுமுதல் இவளுக்கு தாய்வீட்டு ஆதரவு கிடையாது.

பாண்டியன் வழியிலும் பெரிதாக யாரும் அவளை ஆதரிக்கவோ புறக்கணிக்கவோ இல்லை. ஏதோ நல்லது கெட்டதுக்கு மட்டும் போய் வருகிறோம் என்ற வகையில் அவளுக்கு புகுந்த விட்டார் உறவு இருந்து வந்தது. இரண்டு பெண் பிள்ளைகள் பெற்றவள் போல தெரியமாட்டாள். பாண்டியன் மட்டும் குடிக்காமல் இருந்திருந்தால் அவள் இன்னும் மகிழ்ச்சியாகத்தான் இருந்திருப்பாள். ஆனால் திடீரென்று இந்த குடிப்பழக்கத்துக்கு ஆளான பாண்டியன் தினமும் இரவில் இவளைப் படுத்தும் பாடு சொல்லி மாளாது.

வயதுக்கு வந்த பெண் பிள்ளைகள் இருக்கும் வீட்டில் அவன் பேசும் பேச்சும் நடந்து கொள்ளும் முறையும் ஆபாசமாகவும் அருவருப்பாகவும் இருந்தது. பெற்ற பிள்ளைகள் முன்பு நடந்து கொள்வதைப் போல அவனுடைய நடவடிக்கைகள் இருக்காது. இருந்தாலும் தேவிக்கு வேறு வழி என்ன இருக்கிறது. இவனை விட்டு விட்டு எங்கே

போகமுடியும். எவ்வளவோ சொல்லி பார்த்து விட்டாள். அவன் திருந்துவதாக காணோம்

அதோ ஆடிக் கொண்டு வருகிறான். இன்றைக்கும் அவள் பிள்ளைகள் விழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

கொஞ்ச நேரம் போகட்டும்; நீ சாப்பிடு; நீ தூங்கு; என்று என்னவோ சொல்லி சொல்லி சமாளிப்பாள். ஆனால் அவன் எதற்கும் செவி கொடுக்க மாட்டான். தன் போனை எடுத்து வைத்துக்கொண்டு தேவையில்லாத சில படங்களைப் பார்த்துக் கொண்டு அதைப் பற்றி சிலாகித்து பேசிக்கொண்டு இவளையும் அழைத்து அந்த படங்களை பற்றி அவளிடம் விளக்கி சொல்லுவான். அவள் "பிள்ளைக இன்னும் தூங்கல. கொஞ்சம் பொறு சத்தம் போடாத அமைதியா இரு மெதுவா பேசு" என்று சொன்னாலும் கேட்க மாட்டான் அவளுக்கு பயம் 'எங்கே தன் பெண் பிள்ளைகள் இவன் பேச்சைக் கேட்டு தவறான பாதையில் போய் கெட்டுப் போய் விடுவார்களோ என்று பயந்து கொண்டே இருப்பாள்'

இந்த இரவு தொல்லையிலிருந்து எப்படி தப்பிக்க என்று அவளுக்கு தெரியவில்லை. ஒவ்வொரு இரவும் அவளுக்கு நரகமாகக் கழிந்தது. அவளுடைய பார்வை முழுக்க அவள் பிள்ளைகளின் மீது இருக்கும். ஒரே ஒரு அறை உள்ள வீட்டில் இரண்டு பெண் பிள்ளைகளையும் அடுப்படிக்குள் படுக்க வைத்துவிட்டு கதவை சாத்திவிட்டு இவனோடு அவள் படும் பாடு அந்த இறைவனுக்கு தான் தெரியும்.

இன்றும் கதை அப்படித்தான் தொடங்கியது. என்ன ஆயிற்றோ தெரியவில்லை. திடீரென்று அவள் தலைமுடியை பிடித்து இழுத்துக் கொண்டு வாசலுக்கு வந்தான். கண்ட படி பேசினான். சுற்றி இருப்பவர்கள் எல்லாம் இவனது பேச்சைக் கேட்டு எழுந்து வந்து சுற்றி நின்றார்கள். இவன் அவர்களைப் பார்த்து "இவளுக்கு என்ன பிடிக்கல. வேற யார பிடிச்சு இருக்குன்னு கேளுங்க" என்றான் "யாரடி பிடிச்சிருக்கு உனக்கு என்ன பிடிக்கல. இல்லையா யாரை பிடிச்சிருக்கு சொல்லு" என்று அவள் பிடரி முடியை இறுக்கி பிடித்தபடி கீழே இழுத்து போட்டு முதுகில் மிதித்தான். அம்மா அம்மா என்று அலறினாள். அவளுக்கு அவமானமாக இருந்தது.

முகத்தை மூடிக்கொண்டு அழுதாள். திரும்ப திரும்ப இப்படியே கேட்டுக் கொண்டிருந்தான் ''சொல்லுடி, சொல்லு'' என்று அவளை அடித்தான்.

பக்கத்தில் இருப்பவர்கள் சமாதானப்படுத்தியும் அவன் கேட்பதாக இல்லை அவன் செய்யும் கொடுமைகளை அவளால் வாய் விட்டு அவர்களிடம் சொல்லவும் முடியவில்லை. என்னடி, என்ன புடிக்கலையா அப்ப தாலியக் கொடு என்று கழுத்தில் இருந்த தாலியை அத்துக் கொண்டு புலம்பியபடி போய் விட்டான். அவள் முகத்தை மூடி கொண்டு அழுதபடி வீட்டுக்குள் வந்து படுத்து கொண்டாள். மறுநாள் பிள்ளைகள் அவளிடம் எதுவும் சொல்லாமல் பள்ளிக்கூடம் போய் விட்டார்கள். இவள் உள்ளே படுத்தபடியே இருந்தாள். காலையில் சாப்பிடவில்லை. மதியமும் சாப்பிடவில்லை. ஆனால் இரவானதும் பசி எடுக்க தொடங்கி விட்டது. அதற்கு மேலும் சாப்பிடாமல் இருக்க முடியவில்லை. மெதுவாக எழுந்து முகத்தை கழுவினாள். அடுப்படிக்குள் போய்ப் பார்த்தாள். பெரியவள் ஏதோ கஞ்சி காய்ச்சி வைத்திருந்தாள். அதை எடுத்து மடமடவென்று சாப்பிட்டாள். கொஞ்சம் தெம்பாக இருந்தது.

இருட்டிவிட்டதே. பாண்டியன் குடித்துவிட்டு இப்போது வருவானோ என்று நினைத்தாள். பயமாக இருந்தது. இப்போது என்ன புதிதாக இப்படி கேட்க ஆரம்பித்து இருக்கிறான். இனி என்ன செய்வான் இன்றைக்கும் இப்படியே கேட்டு தன்னை அடிப்பானோ அல்லது வெளியே கூட்டிக் கொண்டு போய் வைத்து எல்லார் முன்னிலையிலும் கேவலமாக பேசுவானோ என்று அஞ்சினாள்.

தேவி எழுந்து விறுவிறு என்று அடுத்த தெருவில் இருக்கும் டெய்லர் அக்கா வீட்டுக்கு சென்றாள். டெய்லர் அக்கா வீடு கொஞ்சம் பெரியது சுற்றி ஒரு காம்பவுண்டு சுவர் இருக்கும். அவங்களுக்கு ஒரு ஜவுளிக்கடை ஊருக்குள் உண்டு. அக்கா ரெடிமேட் துணி தைத்து இங்கிருந்து கொடுத்துவிடுவார்கள் அதை கடை வாசலில் தொங்க விட்டு அங்கு விற்பனை செய்வார்கள். டெய்லர் அக்காவிடம் மூன்று பெண்கள் வேலைபார்த்து வந்தார்கள். அந்த அக்காதான் அந்த

ஏரியாவில் மகளிர் சுய உதவி குழு தலைவியாக இருந்தார். அந்த அக்கா கேரளாவைச் சேர்ந்தவர் ரொம்ப தைரியமாக பேசுவார். அதனால் தேவி அங்கு போய் அந்த அக்காவிடம் கொஞ்ச நேரம் பேசி விட்டு வரலாம் என்று போனாள்.

டெய்லர் அக்கா அவள் முகத்தைப் பார்த்துவிட்டு நிறைய அழுதிருக்கிறாள் என்பதை புரிந்து கொண்டு அவளுக்கு காபி போட்டுக் கொடுத்து ‘‘என்னாச்சு தேவி என்ன பிரச்சனை’’ என்று கேட்டார். தேவி அழுதுகொண்டே நடந்ததைச் சொன்னாள். சரி அவன் வேண்டாம் விடு போய் தொலயட்டு, விடு. நீ அழாதே. உனக்கு ஏதாவது வேலை தெரிஞ்சா சொல்லு. நான் உன்னைய வேலைக்குச் சேர்த்துவிட்றேன். நீ வேலைய பாரு அந்த ஆள் போனா போகட்டும். நீ பேசாம பிள்ளைகளை கூட்டிகிட்டு இங்கே வந்துடு. அங்க தனியா இருக்காத. உங்க தெருவுக்குள்ள அம்புட்டு பேரும் குடிகார பயல் தான். உங்க தெருவுல ஒருத்தன் கூட நல்லவனா இல்ல. நீ அங்க இருந்தா உனக்கு கெட்ட பேரு தான் வரும். பிள்ளைகளை அழைச்சுக்கிட்டு இங்கேயே வந்துடு தேவி என்றார். தேவி நிமிர்ந்து பார்த்தாள். அவளுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

டெய்லர் அக்காவுக்கு வீட்டுக்காரர் இங்கே இல்லை. அவர் பட்டாளத்தில் இருக்கிறார். டெய்லர் அக்காவின் மாமனார் கடை தான் ஊருக்குள் இருக்கு. அந்த கடைக்கு தான் அக்கா தினமும் ஒரு பத்து கவுனாவது தைத்து கொடுத்துவிடுவாள். ஆனால் அக்கா வீட்டுக்காரர் வந்து விட்டால் என்ன செய்வது அவர் இரண்டு வருடத்திற்கு ஒரு முறை வருவார். அப்போது நாம் எங்கே போவோம் என்று யோசித்துக்கொண்டிருந்தாள். அவளுடைய மன ஓட்டத்தை புரிந்து கொண்ட டெய்லர் அக்கா, ‘‘தேவி ஒன்னும் பயப்படாத. எங்க வீட்டுக்காரர் வர இன்னும் ரெண்டு வருஷம் இருக்கு. இப்ப தான வந்துட்டு போனார். நீ பின்னாடி ஒரு ரூம் இருக்கு பாரு. அங்க இருந்துக்க. அவர் வந்தாலும் ஒன்னும் பயம் இல்ல. அங்க பின்னாடி ஒரு கக்கூஸ் இருக்குது. நீ அங்கேயே குளிச்சுக்க. உன் பிள்ளைகளை வச்சிக்கிட்டு அந்த ரூம்ல இருந்துக்க. உன்னை ஏதாவது வேலைக்கு சேர்த்து றேன்.நீ பயப்படாதே என் கூட இரு. நானும் எங்க அம்மாவும் தான இருக்கோம். வேற யார் இருக்கா. இங்க

உனக்கு என்ன பயம். எனக்கு துணையா இருந்துக்க தேவிஎன்றார். தேவிக்கு சட்டென எதுவும் சொல்லத்தோண்றவில்லை.

“நான் என் அம்மாவை கூட்டிகிட்டு வந்து என் கூட வச்சுக்கலாம் நினைக்கிறேன்” என்றாள். “சரி கூட்டிட்டு வா. உங்க அம்மாவையும் கூட்டிட்டு வந்து வச்சுக்கோ. நீங்க நாலு பேரும் அந்த ரூம்ல இருங்க. அது பெரிய ரூம் தான் தேவி. நீ அங்க இருந்துக்கோ. இனி அந்தத் தெருவுக்குள் போகாத. உங்க வீட்டுக்காரர் வந்தா வரட்டும். நான் பேசி அனுப்பி வைக்கிறேன். நீ இங்கேயே இரு”. தேவிக்கு கஷ்டமாக இருந்தது

குடியிருக்க கூட ஒரு குச்சு இல்லாத நிலையில் இன்றைக்கு அடுத்தவர் வீட்டில் வந்து அடைக்கலம் புகவேண்டிய நிலமை வந்துவிட்டதே என்று அவள் மனதிற்குள் வருந்தினாள். ‘‘என்ன செய்வது இதாவது கிடைத்ததே இதுவும் இல்லை என்றால் அந்த தெருவிற்குள் குடிகாரர்களுக்கு மத்தியில் எப்படி வாழ்வது’’ என்பது அவளுக்கு மிகப்பெரிய பிரச்சினையாக தான் தோன்றியது சரிக்காஎன்றாள்.

அடுத்து டெய்லர் அக்கா அவளிடம்’

“உனக்கு என்ன வேலை தெரியும் சொல்லு”

“எனக்கு என்ன தெரியும் நான் வீட்டுல தான் பார்ப்பேன் வீட்டு வேலை தான் பார்த்தேன் அப்புறம் நாங்க லவ் பண்ணி கல்யாணம் முடிச்சுக்கிட்டோம்”.

‘‘உனக்கு டெய்லரிங் தெரியுமா’’

ஒரு மாசம் போனேன்கா எங்கம்மா எங்கே என்னை படிக்க வச்சுது. எங்கே பணம் கட்டுச்சு. ஒரு மாசம் போனேன்அவ்வளவுதான்.

சரி அப்போ உன்னைய ஒரு ரெடிமேட் கம்பெனில சேர்த்துவிட்றேன் அங்க உனக்கு பெருசா தைக்கிற வேலை எதுவும் இருக்காது. லேசான வேலை தான். நீ செய்யு. அதுல உனக்கு ஒரு நிரந்தரமான சம்பளம் வரும் அதை வச்சுக்கோ. நீ

*எனக்கு இப்ப வாடகை எதுவும் தர வேண்டாம். ஒரு ஆறு மாசம் கழிச்சு எனக்கு நூறு ரூபாய் கொடு சரியா உனக்கு சந்தோஷமா இருக்கும். என்றார் தேவிக்கு கொஞ்சம், நிம்மதியாக இருந்தது.*

*"உன்கிட்ட கிரைண்டர் இருக்கா தேவி. கவர்மெண்ட் கிரைண்டர் இருக்கு. ஆனால் அத பரண்ல மேல வச்சிருக்கேன். நான் தான் கடை மாவு வாங்கிக்கிறேன்ல".*

*"சரி தேவி அந்த கிரைண்டர் எடுத்து கீழே வச்சு, அந்த கிரைண்டரில் தோசை மாவு ஆட்டி சாய்ந்திரம் எங்க வீட்டு வாசலில் வைத்து வித்து கொஞ்சம் காசு பார்த்துக்க. உனக்கு அதுல வந்து காலைக்கும் ராத்திரிக்கும் இட்லி தோசைக்கு மாவு கிடைக்கும். அது போக உனக்கு குழம்பு செலவுக்கு அந்த காசு போதும் தேவி. நீ கம்பெனி சம்பளத்தை இந்த பிள்ளைகளுக்கு படிப்பு செலவுக்கு வெச்சுக்கலாம்சரியா. நீ அந்த கிரைண்டரை எடுத்து கீழே வை. மாவுக்கு நொய் அரிசி வாங்கிக்க. இப்ப ரேஷனில் வந்து கோதுமை வாங்கிக்கலாம். நான் ரேஷன் கடைக்காரர் கிட்ட சொல்றேன். நீ வந்து அரிசி வாங்காம கோதுமை வாங்கிக்க. கோதுமை மாவு அரைச்சு நீ பிள்ளைகளுக்கு சப்பாத்தி தோசைன்னு சுட்டு கொடு. மத்தியானம் பிள்ளைங்க ரெண்டும் ஸ்கூல்ல சாப்பிடட்டும். நான் உனக்கு ஒரு 500 ரூபாய் தரேன் இப்போதைக்கு வச்சுக்கோ. அப்புறம வேலைக்கு போய் சம்பளம் வரவும் மாசம் 50 ரூபாயா எனக்கு திருப்பி கொடு, என்ன தேவி"என்று அந்த அக்கா சொன்னதும் தேவிக்கு கண் திறந்தது போல இருந்தது இப்படி எல்லாம் உதவக்கூடியவர்கள் இந்த உலகத்தில் இருக்கிறார்களா? எத்தனை யோசனை சொல்கிறார்.*

*இனி அந்த மனுஷன் வந்தாலும் கூட நம்ம வீட்டுல விடக்கூடாது. எப்படி கேட்டான் எல்லார் முன்னாடியும் வச்சுட்டு உனக்கு யாரடி பிடிச்சிருக்கு யாரடி பிடிச்சிருக்கு என்று கேட்கிறான். இவனை புடிச்சு தானே நான் அவன் கூட வந்தே. இப்படி அசிங்கப்படுத்திட்டானே என்று நினைத்துக்கொண்டே "சரிக்கா நீங்க சொன்ன மாதிரியே நான் செய்கிறேன்" என்று சொல்லி விட்டு கிளம்பினாள்;*

வீட்டுக்கு வரும்போது தெருவுக்குள் நுழைந்ததும் ஒருவருக்கொருவர் இவளைப் பார்த்து ஏதோ பேசியது தெரிந்தது. ராசம்மா பாட்டி மட்டும் இவளை அழைத்து ''என்ன ஆச்சு தேவி, ஏன் பாண்டியன் நேத்து அப்படி பேசினான். நீ என்ன பண்ணுன. அவன் நல்லவனா ஆச்சே. அப்படி பேசமாட்டானே. என்னைக்கும் பேசாதவன் இன்னைக்கு இப்படி பேசுறானே. நீ என்ன பண்ணின என்று கேட்டார். இவளுக்கு நாக்கை பிடுங்கிக்கொண்டு சாகலாம் போல தோன்றியது.

''இந்த தெருக்காரரர்கள் முழுக்க இனி பகலில் இதைத்தான் பேசிக் கொண்டிருப்பார்கள். நான் இரவில் பட்ட வேதனை எல்லாம் இவங்களுக்கு எப்படி தெரியும். நான் யாரையும் நெனச்சிகிட்டு தான் என் புருஷனோட வாழ மறுக்கல்ல. உன்ன மட்டும் தான் நெனச்சிக்கிட்டு இருக்கேன். நான் நல்லவளா இருந்தும் இப்ப இவனாலகெட்டவள்னு பேர் வாங்கிட்டேனே கடவுளே'' என்று தலைகுனிந்தபடியே நின்று கொண்டிருந்தாள்.

''தேவி இங்க பாரு. நீ இப்படி எல்லாம் செய்யாதே. கட்டின புருஷனை விட உனக்கு வேற என்ன பெரிசு. அடுத்தவன் பேச்சைக் கேட்டுக்கிட்டு கண்ணாடிக்கல்லை வைரம்னு நினச்சு யார் கூடவும் போயிராத'' என்று அந்த அம்மா தேவிக்கு புத்தி சொன்னாள்.

தேவிக்கு அவமானமாக இருந்தது சரிங்கம்மா என்று சொல்லிவிட்டு விறு விறு என்று வீட்டுக்குள் வந்து விட்டாள். பிள்ளைகள் இருவரும் பரிதாபமாக உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தார்கள். பிள்ளைகளிடம் ''யாராச்சும் ஏதும் கேட்டாங்களா'' எனக் கேட்டாள். ''எல்லாரும் உங்க அம்மா என்ன பண்றா. எங்க போறா.யார் கிட்ட பேசுறான்னு கேட்டாங்கம்மா. என்றார்கள். சரி இனி இங்கே இருப்பது நமக்கு மரியாதை இல்லை என்று தெரிந்து விட்டது. அவளுக்கு ''நாளைக்கு அம்மாச்சியை வரச் சொல்லி நம்ம எல்லாரும் டெய்லர்அக்கா வீட்டில் போய் தங்கிவிடுவோம். எல்லாத்தையும் எடுத்து கட்டுங்க. உங்க துணி மணி எல்லாம் எடுத்து கட்டி வைங்க. நாளைக்கு அம்மாச்சி வந்ததும் நம்ம போறோம்'' என்று சொல்லி விட்டு படுத்துவிட்டாள்

இரவு வந்ததும் அவளுக்கு மனதுக்குள் பயம் வரத் தொடங்கிவிட்டது. யாரோ தூரத்தில் புலம்புவது போலவும் வாந்தி எடுப்பது போலவும் தோன்றியது வாந்தி வாடை வீட்டுக்குள்ளேயே வீசியது. அவள் அருகில் வந்து அவள் கணவன் ஏதேதோ பேசுவது போல இருந்தது. அவளுக்குள் ஒரு விதமான குமட்டலும் அருவருப்பும் ஏதோ ஒரு கெட்ட வாடை வீசுவது போலவும் இருந்தது. அவளால் நிம்மதியாக உறங்க முடியவில்லை. உள்ளுக்குள் பயமாக இருந்தது. யாரோ கதவைத் தட்டுவது போலவும் தோன்றியது .இது என்ன பெரிய இம்சை. நேற்று வரை அந்த ஆளு தான் பெரிய தொந்தரவா இருந்துச்சு. இன்னைக்கு அந்த ஆள் இல்லாதது கூட பெரிய தொந்தரவாக இருக்கே. இது என்ன பெரிய பிரச்சனையா இருக்கு என்று அவர் நினைத்துக் கொண்டே இருந்தாள்.

மறுநாள் தேவியின் அம்மா வந்ததும் வீட்டு ஓனரிடம் சொல்லிவிட்டு தன் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு அட்வான்ஸ் பாக்கி தொகை கொஞ்சம் இருந்ததை பெற்றுக்கொண்டு டெய்லர் அக்கா வீட்டுக்கு கிளம்பிப் போனாள். டெய்லர் அக்கா அவர் வீட்டுக்குப் பின்னால் இருந்த அந்த ரூமை சுத்தம் செய்து வைத்திருந்தார். பக்கத்தில் இருந்த கக்கூஸ் பாத்ரூம் சுத்தமாக தான் இருந்தது. கொஞ்சம் பெரிய இடம் தான் நாலு பேரும் படுத்துக் கொள்ளலாம். இது போதும் என்று சொல்லி கொண்டாள்.

தேவிக்கு மிகவும் பயமாக இருந்தது எங்கே தன் கணவன் வராமலேயே போய் விடுவானோ என்று ஒரு அச்சம் மனதிற்குள் வந்து வந்து போயிற்று. எங்க போயிருப்பாரு. எங்க போய் சாப்பிடுவாரு. என்ன செய்வார் என்று அடிக்கடி நினைத்துக் கொண்டாள். இரவு நேரங்களில் வரும் போது "அவர் இன்று வந்து விடுவார்" என்றே அவளுக்கு மனம் சொல்லிற்று. லேசாக சத்தம் கேட்டாலும் கதவை திரும்பிப் பார்த்தாள். கதவைத் தட்டிக் கொண்டு வந்து விட மாட்டாரா என்று அவன் மனம் ஏங்கியது. அங்கு போய் நம் பழைய வீட்டில் கேட்பாரோ. அவர்கள் நம்மை பற்றி இல்லாதது பொல்லாதது சொல்லுவார்களோ. நம்மைப் பற்றி ஏதாவது தப்பாக பேசி விடுவாங்களா. நம்ம தேடி திரும்பி வரவே

மாட்டாரா என்றெல்லாம் இரவு நேரங்களில் புலம்பிக் கொண்டிருப்பது வாடிக்கையாகிவிட்டது.

பகலில் வேலைக்கு போனாள் வீட்டில் வெவ்வேறு வயதில் நாங்கு பெண்கள் நல்லபடியாக இருந்தார்கள். அவள் அம்மாவும் மகளும் இவள் காலையில் அரைத்து வைக்கும் மாவை கரைத்து புளிக்க வைத்து விடுவர் பிறகு மாலை நேரத்தில் டெய்லர் அக்கா வீட்டு வாசலில் அந்த மாவை வைத்து கொண்டு அவள் அம்மா உட்கார்ந்துவிடுவார். சில நேரங்களில் அந்த மாவில் ஒரு பணியாரம் சுட்டு தன் பேத்திகளுக்கு அவள் அம்மா கொடுப்பார். இவள் வேலை முடிந்து வந்ததும் இரவில் நான்கு பேரும் சுடுசோறு சமைத்து சாப்பிட்டார்கள். காலையில் இட்லி அவித்து கொடுப்பாள். அந்த இட்லியை அனைவரும்  சாப்பிட்டு கொள்வார்கள் அரிசியை ஊற போட்டு மெஷினில் போட்டு விடுவாள். அந்த மாவை வழித்து வைத்து கிரைண்டரை சுத்தப்படுத்தி வைப்பது அவள் அம்மாவின் வேலையாயிற்று.

பகல் நேரத்தில் தேவியின்  அம்மா டெய்லர் அக்காவிடம் வந்து உட்கார்ந்து ஏதாவது பேசிக் கொண்டிருப்பார். அப்போது டெய்லர் அந்த அம்மாவிடம் ஏதாவது சின்ன சின்ன வீட்டு வேலைகளை செய்யச் சொல்லுவார்.வெங்காயம் உரிப்பது  காய் நறுக்குவது, சில நேரங்களில் வீடு கட்டுவது என்று சின்ன சின்ன வேலைகள் கொடுப்பாள். பிறகு மத்தியானம் ‘‘இங்கே சாப்பிடுங்க.என்கூட உட்கார்ந்து சாப்பிடுங்கள்’’ ’என்று சொல்லி வேலை பார்த்ததாகவும் இல்லாமல் சம்பளம் கொடுப்பது போலவும் தெரியக்கூடாது என்பதற்காக அந்த அம்மாவிடம் பிரியமாக இருந்தாள்.

ஆனால் தேவிக்கு தான் வேலை பார்க்கும் இடங்களில் புதுப்புது பிரச்சனைகளாக முளைத்தது. இப்போது முன்னைவிட வனப்பாகவும் பூரிப்பாகவும் தோன்றினாள். ஒருவேளை அவள் கணவனால் ஏற்பட்ட மன உளைச்சல் தீர்ந்ததே அவளுக்கு ஒரு தெளிவை ஏற்படுத்தி விட்டது போல. நிம்மதியான சாப்பாடு நேர்மையான உத்தியோகம் என்பதால் அவளுடைய மன நலமும் உடல் நலமும் சீர்பட்டு அவள் தெம்பாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தாள்.

முன்பெல்லாம் தொங்கு சடை போடுவாள் இப்போது கொண்டை போடுகிறாள். அதுதான் ஒரே வித்தியாசம்.

கம்பெனியில் சூப்பர்வைசர்களால் அவளுக்கு அவ்வப்போது சிறுசிறு தொல்லைகள் வந்து கொண்டுதான் இருந்தன. ஒரு சூப்பர்வைசர் இவர் கூட வேலை பார்க்கும் ருக்மணி மூலமாக இவளுக்கு வடை வாங்கி தருவதும் கலர் வாங்கி தருவதுமாக இவளை வசப்படுத்த பார்த்தான். ஆனால் இவளோ எதையும் வாங்க மறுத்துவிட்டாள். மற்றவர்களுக்கெல்லாம் சில சூப்பர்வைசர்கள் மத்தியானம் குஸ்கா வாங்கித் தரும்போது இவள் மட்டும் காலையில வைத்த இட்லியை காரச் சட்னி வைத்து சாப்பிட்டுக் கொண்டிருப்பாள். ருக்மணி வந்து கேட்டாலோ அல்லது மற்றவர்கள் கேட்டாலும் இவள் எனக்கு மதியம் சோறு சாப்பிட்டால் தூக்கம் வந்துவிடும் நான் வேலை பார்க்காமல் வீட்டிலேயே தூங்கி பழகிவிட்டேன் அதனால் நான் மதியம் இட்லி சாப்பிடுகிறேன் என்று சொல்லிவிட்டு மடமடவென்று சாப்பிட்டுவிட்டு ஒரு பத்து நிமிடம் படுத்து தூங்கி விடுவாள். அந்த பத்து நிமிடம் கூட அவளுக்கு ஒரு உற்சாகத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது. மதியம் வேலை மகிழ்ச்சியோடு பார்த்து வந்தாள்.

வேலை பார்க்கும் இடத்தில் ஆண்களின் தொல்லை வெவ்வேறாக அதிகமாகியது. சிலர் அவள் அருகே நடந்து செல்லும் போது அவளைப் பார்த்து ஏதாவது ஜாடையாக சொல்லிவிட்டு செல்வதுண்டு. அப்போதெல்லாம் அவள் காது கேட்காத மாதிரி ஏதோ ஒரு துணியை கீழே இருந்து எடுப்பது மாதிரி அடுத்த பக்கம் திருப்பிக் கொள்வாள். திடீரென்று தன் கணவனை நினைத்து அழுவாள். ‘‘அந்த மனுஷன் மட்டும் நல்லா இருந்திருந்தா இந்த தொந்தரவு எல்லாம் எனக்கு வருமா’’.கண்ட கண்ட நாயெல்லாம் என் பக்கம் வந்து நின்னு பார்க்குமா. இந்த நிலைமைக்கு என்ன கொண்டுவந்து வச்சிட்டியே. இதுக்குதான் நான் உன்னை லவ் பண்ணி கல்யாணம் முடிச்சேனா’’ என்று தனக்குள்ளேயே புலம்பி அழுது கொண்டே இருப்பாள். ஆனால் கை வேலை கருத்தாக நடந்துகொண்டிருக்கும்.

தேவிக்கு ஒரு நாள் தூரத்தில் இருந்து தன்னை யாரோ உற்று நோக்குவது போல ஒரு உணர்வு ஏற்பட்டது. நிமிர்ந்து பார்த்தாள் அங்கிருந்து ஒரு சூப்பர்வைசர் இவலை அசிங்கமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு பெரிய ஆள் உயர ஃபேன் இவளுக்கு சற்று தூரத்தில் இருந்தது.அந்த ஃபேன் காற்றில் இவருடைய மேல் சேலை பறந்துகொண்டிருந்தது. அதைத்தான் அவன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை புரிந்து கொண்ட தேவி இவன் வேண்டுமென்றே தான் அந்த ஃபேனை தன் பக்கம் திருப்பி வைத்து இருக்கிறான் என்பதையும் உணர்ந்து கொண்டாள். மறுநாளிலிருந்து முந்தானையை நீளமாகத் தொங்கவிட்டு ஒற்றை முந்தானையை எடுத்து இடுப்பில் சொருகிக் கழுத்திலிருந்து இடுப்பு வரை முழுவதுமாக தன்னை மறைத்து சேலை உடுத்திக் கொண்டு வந்தாள். என் உடல் என் சொத்து என் அனுமதி இல்லாமல் அதை யாரும் பார்க்கவோ ரசிக்கவோ கூடாது என்பதில் உறுதியாக இருந்தாள். அவள் உடை உடுத்துவதை பார்க்கும்போதே அவளிடம் யாரும் வாலாட்ட கூடாது என்பது புரிந்துவிடும்.

இப்படியாக அவள் தினமும் ஒவ்வொருவரையும் சமாளித்துக் கொண்டு ஏதோ அந்த டெய்லர் அக்கா உதவியுடன் தன் அம்மாவின் துணையுடன் ஒரு நான்கைந்து வருடங்கள் கழித்து விட்டாள்.

ஒரு நாள் இவள் வேலை முடிந்து போகும்போது டெய்லர் அக்கா வீட்டு வாசலில் பாவம் போல இவள் கணவன் உட்கார்ந்திருப்பதை பார்த்தாள். அவளுக்கு பகீரென்று இருந்தது. தென்றல் போல ஒரு சின்ன சந்தோஷம் எட்டி பார்த்தது. திகிலாகவும் இருந்தது. என்ன செய்வது இவனை ஏற்றுக்கொள்வதா அல்லது விரட்டி விடுவதா என்று மனதிற்குள் புரியாமலேயே நடந்து அருகில் வந்தாள். இவள் வந்ததை உள்ளே இருந்து பார்த்த டெய்லர் அக்கா வெளியே வந்தார். “தேவி உங்க வீட்டுக்காரரர் வந்திருக்காரு என்றாள். அவன் பாவம் உருக்குலைந்து மெலிந்து கறுத்து போயிருந்தான்.அவள் காதலித்து கை பிடித்த பாண்டியன் இல்லை இவன். அவன் மேல் குடி வாடை அடித்தது. இன்னும் அவன் குடி பழக்கத்தை விடவில்லை. அவன் முகத்தில் பழைய பாண்டியனின் முகத்தை தேடிப்பார்த்தாள்;

*தென்படவில்லை. யாரோ ஒருவன் தன் முன் வந்து உட்கார்ந்து இருப்பதைப் போன்றே தோன்றியது. தலையை தொங்கப் போட்டபடி இருந்தான். அவனால் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை என்பதல்ல அவனுடைய குடியும் அவனுடைய போதையும் அவனது தலையை நிமிர விடாமல் வைத்திருந்தது. இனியும் இவனோடு சேர்ந்து வாழ வேண்டுமா இவனை வீட்டுக்குள் விட்டால் திரும்பவும் இரவுகள் மோசமாகிவிடுமே என்று ஒரு நிமிடம் அவள் நினைத்து பார்த்தாள். கல்லூரியில் படிக்கும் பெண் பிள்ளைகளை ஒரு நிமிடம் நினைத்தாள்.*

*''என்ன வந்திருக்க''*

*''சும்மாதான் பாத்துட்டு போலாம்னு வந்தேன்''*

*'சரி பாத்துட்டே இல்ல''*

*''சாப்பிட்டியா''*

*சாப்பிட்டு தான் வந்தேன்.*

*என்று கிளம்பிப் போய்விட்டான். அவன் இப்போது குடியுடன் கஞ்சா புகைக்கவும் பழகிவிட்டான். அவனுக்கு எதுவுமே புரியவில்லை. எழுந்து நடந்துவிட்டான். அவன் தள்ளாடி செல்வதைப் பார்க்கும்போது அவளுக்கு அழுகையாக வந்தது. ஆனால் "யாரை பிடிச்சிருக்குன்னு சொல்லுடி" என்று அவள் பிடரி மயிரை பிடித்தபடி அவள் முதுகில் குத்தியதும் மறுநாள் ராசம்மா பாட்டி அவளைப் பார்த்து ''கண்ணாடி கல்லை வைரம்னு நெனச்சு யார் கூடவும் போகாதம்மா.. உனக்கு கட்டின புருஷன விட மத்தவன் பெருசா''ன்னு கேட்டதும் இன்னும் அவளுக்கு நெஞ்சில் தீயாகச் சுட்டது. அந்த சூடும் வேதனையும் இன்னும் நெஞ்சுக்குள் இருந்தன. அந்த வேக்காட்டில் இருந்து அவள் இன்னும் வெளிவரவில்லை. நிமிர்ந்து பார்த்தாள். அவன் அவள் கண்களில் இருந்து மறைந்து விட்டான்.*



# *13. தன் பிள்ளை தானே கெடும்*

*ரமணியை அனுப்பிவிட்டு வனரோஜா வீட்டிற்குள் வந்தாள். காபி குடித்துக் கொண்டே இருந்த தனபாலன் "என்னவா ரகசியமா பேசிட்டு போகுது" என்று கேட்டான் "ஆமாம் அவளுக்கு என்ன, அவள் மாமியார் ஆம்பள புள்ள பெறச் சொல்லுதாம். ஏற்கனவே ரெண்டு பொட்டப்புள்ள இருக்கு. எந்த சொத்து பத்து வச்சிருக்கா? ஆம்பள புள்ள பெத்து அதை கட்டி ஆளப் போகுது? சும்மா கிழவி பேச்சை கேட்டுக்கிட்டு நாளை தள்ளிக்கிட்டே போறாள். நமக்கென்ன? சொன்னால் கேட்டால் தானே? இனி அஞ்சாவது மாசம் வருவாள். அப்புறம் அதை துண்டு துண்டாக தான் வெட்டி எடுக்கணும்" என்று சொல்லி விட்டு அடுப்படிக்குள் போய் விட்டாள். தனபாலனுக்கு புரிந்தது அவன் சட்டையை மாட்டிக் கொண்டு கிளம்பி விட்டான்.*

*அவன் வாசலுக்கு போகும்போது உள்ளே இருந்த வனரோஜா "யாரோ உங்க பிரண்டு ஒய்ஃபுக்கு சொன்னீங்களே அது என்னன்னு கேட்டுட்டு வாங்க" என்று சத்தம் போட்டு சொன்னாள்."சரிசரி கேட்கிறேன், நல்லவேளை ஞாபகப்படுத்தின, இல்லன்னா மறந்தே போய் இருப்பேன். அவனைப் போய் பார்த்துட்டு" என்று சொல்லிவிட்டு செருப்பை மாட்டிக் கொண்டான்.*

*வனரோஜா தனக்கு காபி போட்டுக் கொண்டு வந்து ஹாலில் உட்கார்ந்து குடித்தபடி மகளிர் சுய உதவி குழு நோட்டை எடுத்து விரித்து வைத்தாள்.மகளிர் சுய உதவிக் குழுவின் தலைவியாக இருக்கும் வனரோஜா பல பெண்களுக்கும் பல விதமான உதவிகளைச் செய்து வருகிறாள். அவர்களின் பிள்ளைகளை பள்ளிக்கூடத்தில்; அவளுக்குத் தெரிந்த அந்த ஒரே பள்ளிக்கூடத்தில் மட்டும்தான் கொண்டு போய் சேர்ப்பாள். அவளுக்குத் தெரிந்த ஃபேன்சி ஸ்டோரில் அந்த பிள்ளைகளுக்கான ஸ்கூல் பேக், பென்சில் பாக்ஸ், பிரவுன்*

பேப்பர் போன்றவற்றை கடனில் வாங்கிக் கொள்ளும்படி சொல்லிவிடுவாள்.

சிலருக்கு அடுத்தவர் பெயர் போட்டு கடன் கொடுப்பாள். இவ்வாறு கொடுக்கும் கடனுக்கு மகளிர் குழு வட்டி கிடையாது. அஞ்சு வட்டி வாங்குவாள். சில பெண்களுக்கு வங்கியிலும் கடன் வாங்கிக் கொடுப்பாள்.அப்போது அந்த பெண்களிடம் வாங்கி கொடுத்த கடனுக்கு நூற்றுக்கு ஐந்து சதவீதம் கமிஷன் பெற்றுக் கொள்வாள். இப்படியாக இவள் பலப்பல உதவிகளைச் செய்து வந்தாள்.

அருகில் இருக்கும் அமுதா மருத்துவமனைக்கு இவள் அடிக்கடி போவாள். தங்கள் குழுவில் யாருக்காவது சுகமில்லை என்றால் டாக்டர் அமுதாவிடம் தான் அழைத்துச் செல்வாள். அமுதா அம்மா ரொம்ப நல்லவங்க வனரோஜா அழைத்துக் கொண்டு வரும் அனைவருக்கும் அவ்வப்போது இலவச மருந்துகளை கொடுப்பார்கள். சில சமயம் கையில் காசில்லை என்றால் கூட ஃபிரியாக ஊசி போட்டுவிடுவார்கள். இதனால் அமுதா அம்மாவை போய் பார்ப்பது என்றால் குழு பெண்களுக்கு மிகவும் பிடிக்கும் சிலருக்கு நாள் தள்ளிப் போகும் போது கூட அம்மாதான் மாத்திரையோ ஊசியோ போட்டு உதவுவார்.

வனரோஜா ஆதாயம் இல்லாமல் எதையும் செய்ய மாட்டாள். சர்க்கரையாகப் பேசி காரியத்தை சாதித்துக் கொள்வாள். இன்று ரமணியை அமுதாவிடம் அழைத்துப் போய் விட வேண்டும் என்று ஒரே குறிக்கோளுடன் நயமாகப் பேசி மாமியாரிடம் சம்மதம் வாங்கிக் கொண்டு வரும்படி அனுப்பி இருக்கிறாள். எப்படியும் நாளைக்கு ரமணியால் 2000 ரூபாய் கிடைத்துவிடும். இந்த சந்தோஷக் கனவுடன் அவள் மகளிர் சுய உதவிக்குழு நோட்டை வரிசை வரிசையாக பார்த்துக்கொண்டு வந்தாள்.

ராமலட்சுமி மூன்று மாதமாக பணம் செலுத்தவில்லை போய் பார்த்தால் என்ன; எப்போது போனாலும் புலம்பத்தான் செய்வாள்? ஒரு காபி கூட கிடைக்காது. ஒவ்வொரு வீட்டில் என்னென்ன தருகிறார்கள்? பணம் கொடுக்கிறார்களோ இல்லையோ காபி சாப்பாடு பழம்

எல்லாம் கிடைக்கும். ஆனால் இந்த ராமலட்சுமி தரித்திரம் பிடித்தவள். போனால் எதையாவது புலம்பிக் கொண்டே இருப்பாள். என்ன செய்வது பணம் வந்தாக வேண்டுமே இல்லையென்றால் பேங்க்காரனுக்கு யார் பதில் சொல்வது? போய்க் கேட்டு விட்டு வருவோம். நாலு வார்த்தை நறுக்கென்று நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாவது போல கேட்போம் என்று ஆத்திரத்துடன் புறப்பட்டாள்.

ராமலட்சுமி வீட்டில் அவள் மகள் மூன்று பிள்ளைகள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் புளியமுத்து வைத்து ஏதோ விளையாடிக் கொண்டிருந்தனர். ஒத்தையா ரெட்டையா விளையாடி இருப்பார்கள். ஏனென்றால் கைகளை மூடிக் கொண்டுதான் இருந்தார்கள்.

“எங்கடி உங்க அம்மா?

அம்மா வெளிய போய் இருக்கு. காசுக்கு தானக்கா ஒரு இடத்துக்கு போய் இருக்காங்க.இப்ப வர்ற நேரம் தான்க்கா இருங்க” என்றால் ஒருத்தி.

“உங்க அம்மா நான் வரும்போது இருக்கமாட்டேங்குது. காசு கொண்டு வந்து கட்ட மாட்டேங்குது. நீங்க என்னடி வேலை செய்றீங்க” என்று வனரோஜா கேட்டாள்.

“அக்கா நாங்க படிச்சுக்கிட்டு இருக்கோம்கா. எங்களுக்கு ஃபீஸ் கட்ட தான் ஒரு இடத்துல காசு கேட்டு போயிருக்கு எங்க அம்மா வேலை பார்க்கிற வீட்ல அவங்க பிரெண்ட்ஸ் ஒருத்தவங்க ஏழைப் பிள்ளைகளுக்கு பீஸ் கட்ட பணம் குடுப்பாங்களாம். அவங்க கிட்ட போயி எங்க ரெண்டு பேருக்கும் பள்ளிக்கூடத்துக்கு பணம் கட்டுவாங்கலான்னு கேட்க போயிருக்கு”.

பாவம் அந்த பிள்ளைகள் அப்பாவித்தனமாக உண்மையைச் சொல்லி விட்டனர். வனரோஜா அந்த பெண்களை கடுப்புடன் பார்த்தாள். பின்பு வாசலில் கிடந்த ஒரு கல்லில் உட்கார்ந்தாள். தரையைப் பார்த்துக் கொண்டே அமைதியாக இருந்தாள். மூன்று பிள்ளைகளும் நின்று

*கொண்டிருந்தன. அவர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை, நிமிர்ந்து பார்த்தாள்.*

*''இந்த மூன்றும் படிச்சு என்ன பண்ணப் போகுது எங்கயாவது வேலைக்கு அனுப்பலாமே என்று யோசித்தவள், என்னடி படிக்கிறீங்க என்று கேட்டாள் ''அக்கா நான் பிளஸ் 2 படிக்கிறேன், தங்கச்சி டென்த் படிக்கிறாள். எங்க அக்கா படிக்கலக்கா. வீட்லதான் இருக்கு'' என்றாள் ஒரு பெண்.*

*தேவி வந்ததிலிருந்து இவள் மட்டும்தான் பதில் பேசினாள். மற்றவர்கள் அமைதியாக நின்று கொண்டிருந்தனர். சற்று தள்ளி மூன்று சிறுவர்கள் விளையாடிக்கொண்டிருந்தனர் அவர்களும் அந்த வீட்டுப் பிள்ளைகள் தான்.*

*''சரி உங்க அம்மா வந்தா தேவி அக்கா வந்துட்டு போனாங்கன்னு சொல்லு. பணத்தை கொண்டு வந்து குடுக்க சொல்லடி'' என்று சொல்லிவிட்டு விறுவிறு என்று மனதுக்குள் ஒரு யோசனையுடன் நடந்தாள்.*

*வனரோஜா வேகமாக நடந்து போய் பெரிய பங்களாவும் இல்லாமல் நடுத்தர வீடும் இல்லாமல் இருந்த ஒரு பெரிய வீட்டுக்குள் போனாள். இவள் இரும்பு கேட்டை திறந்த சத்தம் கேட்டு உள்ளேயிருந்து ஒரு பெண் ஜன்னல் வழியாக பார்த்து விட்டு ''வாங்கக்கா'' என்று கதவைத் திறந்தாள். உள்ளே போய் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டுஇருந்தாள். காபி டிபன் எல்லாம் கிடைத்தது, மெல்ல கனியை எய்தாள்.*

*''எப்ப நீ கடைக்கு போகணும்'' என்று கேட்டாள்.*

*''மணி 6 ஆயிடுச்சு இல்ல, இப்ப நான் போனேன்னா அவர் பஜாருக்கு போவாரு. அவர் வரஎட்டு எட்டரை ஆகும். இந்த பிள்ளைங்க டியுஷனுக்கு போயிட்டு வர்றதுக்குள்ள வந்து விடுவேன். அப்புறம் அவர் கடையை பாத்துக்குவார்'' என்றாள். அதற்கு வனரோஜா,*

*''பிரியா நான் சொல்றதை கேளு. உங்க கடைக்கு காலைல இருந்து சாயந்திரம் வரைக்கும் ராத்திரி ஒன்பது மணி*

*வரைக்கும் இருக்குற மாதிரி ஒரு பிள்ளையை வேலைக்கு போடு. மத்தியானம் உங்க வீட்டுக்காரர வீட்ல வந்து சாப்பிட்டு விட்டு படுத்து தூங்கி எந்திரிச்சு போகச் சொல்லு; அல்லது மத்தியானம் பஜாருக்கு போயிட்டு வரச் சொல்லு. சாயந்திரம் அவரை கடையில் உட்காரச் சொல்லு. நீ கடைக்கு போகாதே. நீ பாட்டுக்கு ராஜாத்தி மாதிரி வீட்டில் இரு. உன் பிள்ளைகளை படிக்க அனுப்பிட்டு, கொஞ்ச நேரம் உட்கார்ந்து டிவி பாரு, பிள்ளைங்க படிச்சிட்டு வந்த பிறகு, அதுகளுக்கு ஏதாவது டிபன் பண்ணி குடு. சரியா, அத விட்டுட்டு நீயும் போய் கடையில் உட்கார்ந்துகிட்டு ரெண்டு பேரும் அல்லாடுறிங்க. ஒரு பிள்ளையை வேலைக்கு போடு'' என்று மெதுவாக தன் அஸ்திரத்தை எடுத்து விட்டாள்.*

*அதற்கு பிரியா,''அக்கா ஒரு பிள்ளையை வேலைக்கு வச்சா அதுக்கு சம்பளம் கொடுக்கணும். எங்கக்கா நல்ல பிள்ளைகள் கிடைக்கிது''.*

*''நீ எதுக்கு கவலைப்படுற, நான் உனக்கு நல்ல புள்ளையா கொண்டு வர்றேன். எவ்வளவு சம்பளம் கொடுக்கலாம். நீயே சொல்லு. காலை 9 மணியிலிருந்து இரவு 9 மணி வரை அங்கேயே உட்கார்ந்து இருக்க சொல்றேன். நீங்க கல்யாணத்துக்கு போகலாம்; நல்லது கெட்டதுக்கு ஜோடியாக போகலாம்.சினிமா ஷாப்பிங்குனு சேர்ந்து போகலாம் சொல்லு'' என்றாள்.*

*''சரிக்கா எங்க வீட்டுக்காரர் கிட்ட கேட்டு சொல்றேன்'' என்றாள்.''சரி நீ கேட்டு சொல்லு, நான் ரெண்டு நாள் கழிச்சு காலையில புள்ளைய கூட்டிட்டு வரேன்'' என்று சொல்லிவிட்டு கிளம்பினாள்.*

*வனரோஜா மனதில் கொஞ்சம் நிம்மதி. வீட்டுல சும்மா இருக்கிறவள இங்கே அனுப்பிரலாம். இனி அடுத்த ரெண்டு பிள்ளையையும் அந்த வீட்டை விட்டு கிளப்பி விட்டால் தான் நமக்கு மாதாமாதம் பணம் வரும், என்று முடிவு செய்தாள்.*

*இவளுகளுக்கு கடன் கொடுத்துவிட்டு நம்ம இவளுக்கு வேலை வாங்கி கொடுத்து அப்புறம் கடன் வசூல்*

பண்ண வேண்டி இருக்கு என்ன கஷ்ட காலம் என்று புலம்பிக் கொண்டே வந்தாள்.

வீட்டிற்கு வந்தவள் அடுத்தது என்ன செய்யலாம் என்று யோசித்தாள்.''அது ரொம்ப சின்ன பிள்ளையா இருக்கே அதை எங்கு அனுப்புவது?'' என்று யோசித்தவளுக்கு திடீரென்று ஒரு ஞானோதயம் ஏற்பட்டது. அப்படி செய்வோம் என்ற முடிவுடன் ரெண்டு வீடு தள்ளி இருக்கும் ஆயாவை போய் சந்தித்தாள்.

''என்ன பள்ளிக்கூட வேலையெல்லாம்எப்படி இருக்கு என்று கேட்டாள். என்ன அம்புட்டு பிள்ளைக்கும் கால் கழுவி விடுற வேலை. இதெல்லாம் ஒரு வேலையா என்று ஆயாம்மா சலித்துக் கொண்டாள். அப்போது பார்த்து தேவி தன் அஸ்திரத்தை எடுத்து வீசினாள்.

''எதுக்கு நீங்க அந்த வேலையை எல்லாம் செய்யுறீங்க நீங்க பிள்ளைகளுக்கு தலை சீவி பவுடர் போட்டு அந்த வேலை மட்டும் பாருங்க. இதுக்கெல்லாம் வேற ஒரு பிள்ளையை போட்டுக்கங்க என்றாள்.''நீங்களே பெரிய டீச்சர் கிட்ட சொல்லுங்க'' என்றார் ஆயாம்மா. மறு நாள் ஸ்கூலுக்கு போனாள் வனரோஜா. பெரிய டீச்சர் எனப்படும் தலைமை ஆசிரியையிடம் நைசாக பேசினாள்

''பாவம் கஷ்டப்படும் குடும்பம்; எட்டு பிள்ளைகள்; சாப்பாட்டுக்கே கஷ்டம்; நீங்கள் ஒரு சின்ன வேலை போட்டு கொடுங்கள்; என்று கேட்டாள். வேலையே இல்லையே என்றார் அந்த பெரிய டீச்சர்.

''ஆயிரம் ரூபாய் குடுங்க மேடம். ஆயாவுக்கு துணைக்கு பிள்ளைகளுக்கு கால்கழுவி விட வச்சுக்குங்க'' என்றாள் வனரோஜா. உங்களுக்கு புண்ணியமா போகட்டும் அதைச் செய்யுங்க என்று கெஞ்சி கேட்டாள். 'சரிம்மா வரச்சொல்லுங்க' என்றார் அந்த மேடம்.நன்றி சொல்லிவிட்டு சந்தோஷமாக வெளியே வந்தாள் வனரோஜா.

மனதிருப்தியுடன் புறப்பட்டு வீடு வந்து சேர்ந்தாள். வாசலில் ரமணி உட்கார்ந்து இருப்பதை பார்த்தாள்.''என்ன ரமணி உன் மாமியா என்ன சொல்லுச்சு? நான் எவ்வளவோ

சொன்னேன்கா அது வேண்டாம்னு சொல்லுதுக்கா'', ''சரி சரி இதைச் சொல்லத்தான் வந்தியா? உனக்கெல்லாம் பெத்து போட்டு சீரழிஞ்சா தான் தெரியும்'' என்று கோபித்து கொண்டாள். அவளுக்குள் ஆத்திரம் ரெண்டாயிரம் ரூபாய் போய்விட்டதே என பொருமினாள்.

மறுநாள் ராமலட்சுமியை பார்க்க தனியாகப் போகாமல் தன் வீட்டுக்காரர் ரிட்டயர்டு மிலிட்டரிகாரரை அழைத்துக்கொண்டு போனாள். அவரை விட்டு போலீஸ்காரரை போல மிரட்டி பேசச் சொன்னாள். பயந்து போன ராமலட்சுமி ''இனி மாதாமாதம் பணம் ஒழுங்காக கட்டி விடுவதாக சொன்னாள்'' அந்த நேரத்தில் எப்படி கட்டுவ நீ? உன் பிள்ளைகளை படிச்சு என்ன கலெக்டர் ஆகப் போகுதா? ஆளுக்கு ஒரு வேலைக்கு அனுப்பு என்றாள்.

அக்கா படிக்காம தான் நான் இவ்வளவு கஷ்டப்படுறேன். பிள்ளைகளாவது படிச்சு வரட்டும்.அவுங்களுக்கு பள்ளி கூட பணம் கட்டுறேன்னு ஒரு மிஸ் சொல்லி இருக்காங்க அதுக்குதான் அலைஞ்சுகிட்டு இருக்கேன்'' என்றாள்.''பிள்ளைகளுக்கு பீஸ் கட்டி அதை படிக்க வச்சுட்டு நீ பிச்சை எடுக்க போறியா? ஒழுங்கா இரண்டு பிள்ளைகளை வேலைக்கு அனுப்பு. ஒரு பிள்ளை மட்டும் படிக்கட்டும்'' என்றாள். ராமலட்சுமி விழித்தாள். எந்த பிள்ளையை வேலைக்கு அனுப்புவது என்று யோசித்தாள்.

''இந்த பிளஸ் டூ படிக்கிற பிள்ளை படிக்கட்டும். வீட்டுல சும்மா உட்கார்ந்திருக்க மூத்தவளநான் ஒரு கடையிலசேர்த்துவிடுறேன் அனுப்பு. இந்த சின்னப்பிள்ள இருக்கு பாரு.இது என்னது ஒன்பது படிக்குதா? இதை நிறுத்திட்டு வேலைக்கு அனுப்பு அதை ஒரு ஸ்கூலுக்கு ஆயா வேலைக்கு உதவிக்கு அனுப்பு. நாளைக்கு இரண்டு புள்ளைய கூட்டிட்டு என் வீட்டுக்கு வர்ற. நான் வேலைக்கு சேர்த்துவிட்டதும் மாசம் மாசம் ஒழுங்கா வட்டி கட்டனும்'' என்று கோபமாக சொல்லிவிட்டு போனாள்.

சின்னவளுக்கு ஆயா வேலைக்கு ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம் பேசப்பட்டது.சம்பளத்தை ஆயாம்மா வாங்கி வனரோஜாவிடம் 200 ரூபாய் மாதாமாதம் ரகசியமாக

*கொடுத்துவிட வேண்டும் என்று ஒரு ஏற்பாடு. அந்த ஹெட்மாஸ்டர் அம்மாவிடம் பேசி உங்கள் பள்ளிக்கூடத்துக்கு எந்த உதவி வேண்டுமானாலும் கேளுங்கள் நான் செய்து தருகிறேன் என்று சொல்லிவிட்டு மாதம் 200 கிடைக்கும் மகிழ்ச்சியில் பிரியா வீட்டுக்கு கிளம்பினாள். பிரியாவும் தன் வீட்டுக்காரரிடம் பேசி வைத்திருந்தாள் தேவி அக்கா கொண்டு வந்து சேர்த்து விடும் பொண்ணுக்கு 2000 ரூபாய் சம்பளம் குடுக்கணும் என்று பேசி வைத்திருந்தாள். பாவம் அந்தக்கா அதுக்கு விட்டுக்காரருக்கு தெரியாம நாம் ஏதாவது குடுக்கணும் என்று முடிவு செய்திருந்தாள். வனரோஜா அக்காவிடம் தன் முடிவை சொன்னாள். சரிபா நமக்குள்ள என்ன என்று சொல்லிவிட்டு மகிழ்ச்சியோடு வீட்டுக்கு வந்தாள்.*

*இனி மாதாமாதம் ராமலட்சுமி மகளிர் சுய உதவிக்குழு பணத்தை கட்டிவிடுவாள். அத்துடன் இவளுக்கும் ஒரு தொகை கிடைக்க வழி செய்து கொண்டாள். இந்த ரமணி தான் கழுத்தை அறுத்து விட்டாள். அவள் மட்டும் சரி என்று சொல்லி இருந்தால் அமுதா அம்மாவிடம் அழைத்துச் சென்று அவளுக்கும் வயிற்றைக் கழுவி விட்டு இரண்டாயிரம் ஆயிரம் ரூபாய் டாக்டரிடம் வாங்கியிருப்பாள். கெடுத்துட்டா பாவி என்று திட்டிக் கொண்டிருந்த போது அவள் கணவன் உள்ளே வந்தான் “என் ஃபிரண்டு கிட்ட பேசிட்டேன். அவன் நாளைக்கு ஒய்ஃப்பை கூட்டிட்டு வரேன்னு சொன்னான். அமுதாம்மா ஆஸ்பத்திரிக்கு கூட்டிட்டு வரச் சொல்லிட்டேன். நீ கூட போயி இருந்து எல்லாம் பார்த்துக்கோ” என்றான்.*

*வனரோஜாவுக்கு ஒரே மகிழ்ச்சி. ரமணியிடம் விட்டதை இவர்களிடம் பார்த்துவிட வேண்டும் என்று சந்தோஷமாக இருவரும் சாப்பிட உட்கார்ந்தனர். வீட்டுக்குள் நுழைந்த அவர்களின் ஒரே மகன் நவீன் எஞ்சினியரிங் கல்லூரிக்கு போய் வருகிறான். அவன் “இன்னைக்கு என்ன சொல்லி அம்மாவிடம் பார்ட்டிக்கு ஐயாயிரம் கேட்கலாம்” என யோசித்தான். வாராவாரம் இப்படி பொய் சொல்வது அவனுக்கு சகஜமாகிவிட்டது. இன்னைக்கு வெள்ளிக்கிழமை தானே “நாளைக்கு ஜமாய்ச்சுடலாம்”னு தன் ரூமுக்குப் போனான்.*



# 14. நாகமணி என்னும் நல்லாள்

"அப்பத்தா இன்னைக்கு நாங்க பிழைச்சது தெய்வாதீனம் ஜஸ்ட் மிஸ் ஒரு பெரிய லாரி எங்க மேல மோத வந்துச்சு. எங்களை ஓவர் டேக் பண்ணி ஒரு ஜீப் வந்தான் பாருங்க மாட்டிக்கிட்டான். ஜீப்புல வந்த நாலு பேரும் அவுட். நாங்க தப்பிச்சோம்" என்று செல்வம் அப்பத்தாவிடம் படபட என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது வீலரை பார்க் பண்ணிவிட்டு வந்த சரவணன் உள்ளே போய் ஃப்ரிட்ஜை திறந்து ஒரு தண்ணீர் பாட்டிலை எடுத்துக்கொண்டு வந்து மடமடவென்று குடித்தான். குடித்ததும் செல்வம் அவனிடம் அந்த தண்ணீர் பாட்டிலை வாங்கி தான் குடிக்கத் தொடங்கினான். அப்பத்தா இவன் சொன்னதை எல்லாம் கேட்காமல் ஐயோ பகவானே நல்ல வேளை என் வம்சத்தை காப்பத்திட்ட என்று வானத்தை பார்த்து ஒரு கும்பிட்டு போட்டாள்.

"ஏன்டா பார்த்து வண்டி ஓட்டக் கூடாது" என்று பேரன்களிடம் கோபமாக சொன்னார். எந்த எடத்துலடா ஆக்சிடென்ட்? என்றார்.

"அப்பத்தா மேலூர்ல அந்த இடத்துல எப்பவும் ஆக்சிடென்ட் நடக்குமாம். வருஷத்துக்கு ஒரு ஆள் மண்டைய போடுவாங்களாம்". அங்க பக்கத்துல இருந்த கடைக்காரர் சொன்னார். அவனை திரும்பி பார்த்து,

சரியா சொல்லு. எந்த இடம்? என்றார் அப்பத்தா.

"மேலூர் தாண்டி உள்ள வரவும் அந்தப் பக்கம் ஒரு ரெட்டை பனை மரம் இருக்கு, அந்த இடத்துல ரோடு திரும்பும். அந்த இடத்துல வருஷா வருஷம் ஆக்சிடெண்ட் நடக்கும்னு சொல்றாங்க. அது வளவு பாருங்க. எதிர் பக்கம்

வண்டி வர்ரது சரியா தெரியாது. சட்டுன்னு வந்து மோதுது'' என்று முடித்தான்.

உடனே அப்பத்தா, சரி உள்ளே போய் சாப்பிடுங்க போங்க என்று சொல்லிவிட்டு சுவர் ஓரமாக சாய்ந்து உட்கார்ந்து வெற்றிலை போட ஆரம்பித்தாள். அவள் ''நாகமணி நம்மளை ஒன்னும் செய்ய மாட்டாள்'' என்றபடி கண்களை மூடி கொண்டாள். பழைய நினைவுகள் அவள் கண் முன் விரிந்தன. அவள் கணவர் நேரில் இருந்து பார்த்தவர் அவர் சொல்லியவை இப்போது நினைவுக்கு வந்தன.

பக்கத்து வீட்டில் மேலூரில் இருந்து திருமணம் செய்து கொண்டு வந்திருந்த நாகமணி திடீரென்று இறந்து விட்டதாக சொல்லி ஒரு நாள் காலையில் எல்லோரும் அழுது கொண்டு அவள் வீட்டுக்குப் போயினர். அவள் மாமனார் மாமியார் வாசலில் உட்கார்ந்து இருந்தனர். எல்லோரும் போய் துக்கம் விசாரித்துவிட்டு வந்தனர்.

ராத்திரி நெஞ்சு அடைப்புன்னு சொன்னதாகவும் ஏதேதோ மருந்து கொடுத்தும் சுகம் ஆகவில்லை. உயிர் பிரிந்து விட்டது. அவளுக்கு ஏதோ இருதயநோய் இருந்திருக்கிறது என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள்.

ஒரு வாரம் கழித்து எதிர்வீட்டு பஞ்சமிக்கு பேய் பிடித்துவிட்டது. திடீரென்று கத்துவாள், வெளியே ஓடுவாள். எதிர் வீட்டு நாகமணி வீட்டுக்குள் போய் 'தங், தங்' குதிப்பாள். அப்போது அவள் கண்கள் பிதுங்கி வெளியே வருவதை போல் இருக்கும் நாகமணி மாமியாரை பிடித்து கழுத்தை நெறிப்பாள் சேலையை உருவுவாள். எல்லோரும் பயந்து ஓடி போய் அவளை பிடித்தனர். அமைதியாக வந்துவிட்டாள்.

பஞ்சமியை கோடாங்கியிடம் அழைத்துச் சென்றார்கள். ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை அழைத்துப் போவதும் அவர் பாட்டுப்பாடி நீ யார் என்று கேட்பதும். பஞ்சமியை பிடித்திருக்கும் பேய் தான் யார் என்று சொல்லாததால் அவர்கள் வீட்டுக்கு திரும்பி வருவதுமாக சிலவாரங்கள் கடந்தன. இதற்கிடையே நாகமணியின் மாமியார் கீழே விழுந்ததில் இடுப்பெலும்பு முறிந்ததால் மதுரை பெரிய ஆஸ்பத்திரிக்கு போய் சேர்த்துவிட்டனர்.

மாமனார் சமைத்து போட ஆள் இல்லாததால் அவர் தன் தம்பி வீட்டுக்கு போய் தங்கி கொண்டார். வீடு பூட்டி கிடந்தது.

பஞ்சமி அங்கே ஒ எனக் கத்தி கொண்டு போய் அந்த வீட்டு கதவை உடைத்தாள். எல்லோரும் செத்து போன நாகமணி தான் பஞ்சமியை பிடித்திருக்கிறாள் என்று பேசினார். பஞ்சமி கொலை வெறியோடு இருந்தாள். ஒரு நாள் அருகில் இருந்த பள்ளிவாசலுக்கு அழைத்துப் போனார்கள். அங்கு இரவு முழுவதும் படுக்க வைத்துவிட்டு காலையில் அழைத்துக் கொண்டு வந்தனர். இவ்வாறாக இரண்டு மாதகாலம் பஞ்சமி தலை மயிரைப் பிடித்தபடி திடீர் திடீர் என்று கத்துவாள், கதறுவாள். வீட்டை விட்டு வெளியே ஓடி வருவாள். இழுத்துக்கொண்டு போய் ஒரு பக்கம் மாட்டுக் கொட்டகையில் கட்டி வைத்து விடுவார்கள்.

பஞ்சமியின் அண்ணன், தங்கையை பார்க்க பாவமாக இருக்கிறது என்று வருத்தப்பட்டான். அப்போது ஒரு மலையாளத்து சாமியார் பக்கத்து ஊரில் வந்திருப்பதாகச் சொல்லி அவரை அழைத்துக்கொண்டு ஒருநாள் வந்தார்கள். அவர் ஏதோ ஏதோ மந்திரம் எல்லாம் சொல்லி அவளை உட்கார்த்தி வைத்து அவளிடம் மெதுவாக குறைந்த சத்தத்தில்,

''நீ யார் உனக்கு என்ன வேண்டும்'' என்று கேட்டார் அப்போது அவள் இரண்டு கைகளையும் தரையில் அடித்து விரித்துப் போட்ட தலையை மூன்று முறை சுற்றி முடியை பின்னால் தள்ளி உதறிவிட்டு நிமிர்ந்து அவரைப் பார்த்தாள். முறைத்துப் பார்த்தாள்.

'சொன்னா என்ன செய்வாய்' என்று கேட்டாள்,

'சொல்லு', என்றார் மந்திரவாதி.

'சொன்னா என்ன செய்வாய் என்று ஓங்கிய குரலில் கத்தினாள்' சுற்றி நின்று வேடிக்கை பார்த்தவர்கள் பயந்தனர். சிறு பிள்ளைகள் அங்கு இருக்கக் கூடாது என்று வீட்டுக்கு விரட்டி விட்டனர்.

மந்திரவாதி 'சொல்லு நீ சொன்னதை செய்வேன்' என்றார்.

'என்ன கொண்டுபோய் எங்க வீட்டுல விட்டுடு. எங்க ஊர்ல விட்டு ' என்றாள்.

மந்திரவாதி 'சரி நீ கிளம்பு' என்று சொல்லிவிட்டு அவள் தலைமயிரை பிடிக்கப் போனார். உடனே பஞ்சமி முறைத்தபடி அவர் கையை தட்டி விட்டு திரும்பவும் தங் தங் என்று தரையில் உட்கார்ந்து அப்படியே குதித்தாள். உட்கார்ந்தபடி குதித்து தலையை சுற்றி சுற்றி ஆடினாள் மந்திரவாதி 'இவளை அழைச்சுட்டு போங்க' என்று சொல்லிவிட்டார். பஞ்சமி வீட்டு பெண்கள் அழைத்துக்கொண்டு போய் அதே மாட்டுக்கொட்டகையில் ஒரு ஓரத்தில் கட்டி வைத்து விட்டனர்.

வீட்டிற்குள் வந்த மந்திரவாதி 'அவள் போகிறேன்னு சொல்லிட்டாள். அடுத்த வியாழக்கிமை பூஜ போட்டு 'யார் எவர்' என்று கேட்டு அனுப்பி வச்சுடுவோம்' என்று சொல்லி அதற்கான செலவுகளையும் வாங்கி வைக்க வேண்டிய பொருட்களின் பட்டியலையும் எழுதிக் கொடுத்து விட்டு போய் விட்டார்.

மறுவாரம் வந்தபோது மந்திரவாதி ஒரு கோடாங்கியையும் அழைத்துக் கொண்டு வந்தார். பஞ்சமியை அழைத்து கொண்டு வந்து அவர் முன்னே உட்கார வைத்தார்கள். அந்த கோடாங்கி உடுக்கு அடித்து பாட்டாக பாடினர்.

"யாரம்மா நீ உன் ஊரென்ன பேரென்ன",

"உறவென்ன பகை என்ன",

"எடுத்துச் சொன்னால் இறக்கி விடறேன்",

"ஏறி நின்னா அடிச்சு விடுவேன்"

என்று பாடவும் பஞ்சமி முறைத்து குதித்தாள். அவர் விபூதியை எடுத்து உச்சந்தலையில் எறிந்தார்.

தலையை மூன்று முறை சுற்றி தரையிலிருந்து குதித்து விட்டு,

"கன்னி ஏங்குகிறது காளிக்கு கேக்கலையா",

"மங்கை ஏங்குகிறது மாரிக்குகேக்கலையா",

"பொண்ணு என்கிறது பூமிக்கு கேக்கலையா",

என்று சொல்லி அழுதாள்.

"எந்த ஊரு பொண்ணு எதுக்கு அழுகிறே"

"என்னன்னு சொல்லு எல்லாம் கொடுத்துடறேன்",

"இளங்கன்னிய விட்டு எங்கேயாச்சும் போய்டு",

என்று சொல்லியபடி அவர் உடுக்கை தட்டினார்.

"ஐயா நான் பொறந்தது மேலூர்.

வாழ்க்கப்பட்டது இந்தூரு,

நல்ல ஒருவனுக்கு நல்லாத்தான் கொடுத்தாங்க,

அவரோடு நான் இருந்து வாழலையே,

அவரு என்னன்னு கேட்கலையே,"

"மதி கெட்ட மாமன் மருமகள்னு பாராமல்

மானங்கெட்ட மாமன் என்னை தன் மகள்னு நினைக்காம

அடுப்பில்லாமல் சோறாக்கி ஆசையா போடுன்னான்

மூனு வேளை சோறு முழுசா வந்து போடுன்னான்

முழுகாம நான் இருக்கேன் தள்ளி போ நாயேன்னேன்",

"ஆருடி நாய் அவுசாரி அடிச்சே கொன்னுருவேன்

கடுங்காய் புளிக்குமடி கனி இங்கே இனிக்குமடி

தள்ளி போகாதடி தங்க கிளியேன்னான்'',

''ஊருக்கு சொல்லிடுவேன் உன் மானத்தை வாங்கிடுவேன்

போராடி பார்த்தேன் பொட்டச்சி முடியலையே

வெளியே வந்தால் வெனைகாரி மாமியா

உள்ளிருந்து இரு கையை மாமன் பிடிச்சிழுக்க

வெளியே இருந்த வினைகாரி இரு கதவை இழுத்தடைக்க

கதுவுக்குள்ள சிக்கி கண்ணு முழி பிதுங்கிருச்சே

கழுத்தெலும்பு முறிஞ்சு கைலாயம் போனேனே

கன்னி அழுத குரல் காளிக்கு கேக்கலையே

மங்கை அழுத குரல் மாரிக்கு கேக்கலையே'',

என்று பஞ்சமி ராகம் போட்டு அழுதாள். இடையிடையே யாரையோ முறைத்தாள். உரத்த குரலில் ஓங்கி கத்தினாள். சுற்றி நின்றவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து கொண்டனர்.

பஞ்சமி மீது மந்திரவாதி விபூதியை எறிந்தார். சரி இந்த பொண்ணு விட்டு போய்ட்டு, இங்கே இருக்குறவங்களை வாழவிடு / எங்கே போற, சொல்லு என்றார். பஞ்சமி குனிந்து இருந்தபடியே,

''எங்க ஊருக்கு கொண்டு போய் விடு. பச்சை கலையத்துல வச்சு அடச்சு கொண்டு போய் இரட்டை பனைக்கு நடுவில் என்ன தானிச்சுடு'' என்ன கொண்டு போய் சேர்த்துடு. வருஷம் ஒரு உசுரு வாரி குடிச்சிடுவேன். வாழ்வரசி, பச்சப்புள்ள, வாழ்ந்துகெட்ட மகராசி, யாரையும் தொட மாட்டேன் இது சத்தியம் சத்தியம் சத்தியம். சேர்த்துடுய்யா; உங்க பிள்ளை குட்டி எல்லாம் நல்லா இருக்கும். இது சத்தியம்'.

என்று எரிந்து கொண்டிருந்த சூடத்தின் மீது அடித்தாள்.

மந்திரவாதி எல்லோரும் வீட்டுக்கு போங்க அடுத்த வாரம் பார்க்கலாம் என்று சொல்லிவிட்டார். பெண்கள் எல்லோரும் கூடி கூடி நாகமணியின் மாமனார் மாமியாரின் கொடுமைகளை பற்றியே பேசிக்கொண்டனர்.

பின்பு மறுநாள் வந்தார். பகலில் பஞ்சமி வீட்டின் ஆண்களோடு என்ன செய்ய வேண்டும் என்று விளக்கினார். ஒரு கார் கேட்டார். தைரியமான டிரைவர் வேண்டும் என்றார். இன்னும் இரண்டு 'தொழிலாளிகள்' கூட வர வேண்டும் என்றார். செல்வம் சரவணனின் தாத்தா டிரைவராக கார் எடுத்துக்கொண்டு போக ஒப்புக்கொண்டார்.

மறுநாள் காலையில் மலையாள ஜோசியர் இரண்டு பேருடன் வேண்டிய பொருட்களுடன் வந்தார். நாகமணியின் மாமனார் வீட்டுக்கு ஊர் சபை அனுமதியுடன் போய் ஒரு இடத்தில் மால் [நான்கு புறமும் நூல் கட்டி உள்ளே அமர்தல்] கட்டி உட்கார்ந்து அங்கிருந்து பிடிமண் எடுத்து பச்ச கலயத்தினுள் வைத்து சுற்றி நூல் போட்டு கட்டினர். சேவலை காவு கொடுத்தனர். மலயாளி கையில் கலயமும் கோடங்கி கையில் ஒரு மூடை அளவுக்கு அவல், பொரி எலுமிச்சங்கனியும் இருந்தது. இன்னொரு 'தொழிலாளி' மறுபுறமும் நடந்து காருக்குள் ஏறி உட்கார்ந்தனர். டிரைவர் காரை எடுத்தார்.

'எங்கேயும் நிறுத்தக் கூடாது. காரை உலுப்பும்; கவுக்க பார்க்கும்; ஸ்டிரின்குல இருந்து கையை எடுக்க கூடாது' என்றார் மந்திரவாதி. வழியில் கோடாங்கி தன் கையில் இருந்த மூடையில் இருந்து அவலையும் பொரியையும் வெளியே வீசிக்கொண்டே வந்தார். டிரைவர் கவனமாக ஓட்டினார். வண்டி ஆங்காங்கே குலுங்கியது. ஒருவரோடு ஒருவர் முட்டிக் கொண்டனர். அந்த இடங்களில் எலுமிச்சங்கனிகளை வீசினார். வழியில் இருக்கும் ஆவிகள் இந்த நாகமணியை போக விடாமல் தடுப்பதாக பேசிக்கொண்டனர்.

மேலூரை நெருங்கும் போது ஒரு இடத்தில் நல்ல வெளிச்சம் இருந்தது அங்கெ ரெட்டை பனை மரங்கள் இருப்பது தெரிந்தது. வண்டியை அங்கெ நிறுத்துப்பா என்றார் மந்திரவாதி.

*வண்டி நின்றது. கோடாங்கி இறங்கினார். அங்கெ அவல் எறிந்திருக்க வேண்டும் இவர் செய்யவில்லை. அடுத்து இறங்கியதும் மந்திரவாதி தாடி விழுந்து உருண்டார். அய்யய்யோ என்று கோடாங்கி கத்தினார். ஆனால் கலயத்தை விட்டுவிடாமல் கையில் பிடித்தபடியே எழுந்துவிட்டார். எல்லோருக்கும் போன உயிர் திரும்பி வந்தது. பிறகு பச்ச கலயத்தை மண்ணை தோண்டி வைத்து தானித்துவிட்டனர். டிரைவர் காரில் இருந்து கொண்டார். அரை மணி நேரத்தில் மூவரும் திரும்பி வந்தனர்.*

*அந்த நாகமணி தான் அந்த ரெட்டை பனை மரத்துக்கு நடுவில் இருக்கிறாள். அவள் தன்னை கட்டிகொடுத்த வீட்டில் கன்னி பொன்னையும் பால் பசுவையும் வாழவிடவில்லை. பொண்ணுக தாலியறுத்தும் வாழாமலும் இருக்குதுக. ஆம்புளைக ரெண்டு பேரும் பைத்தியம் பிடிச்சு திரியுறானுங்க. பேரன் பேத்திக அற்பாயுசுல போய்ட்டானுங்க. அந்த வீட்டில் பலரை நாகமணி காவு வாங்கி விட்டாள். அந்த வீடு இப்போது குட்டிச்சுவராக கிடைக்கிறது.*

*"அம்மா நாகமணி 'என்வம்சத்தைக் காப்பாத்தி கொடுத்தியே. என் ரெண்டு பேரப் பிள்ளைகளையும் காப்பாத்தி கொடுத்துட்ட. நீ நல்லவம்மா. நீ தெய்வமாய் இருக்கணும்மா" என்று கண்ணை மூடி படுத்திருந்தபடியே கையெடுத்துக் கும்பிட்டாள்.*

*அங்கு வந்த செல்வம் "என்ன அப்பத்தா படுத்துக்கிட்டே சாமி கும்பிடறயா? என்று கேட்டான். அப்பத்தா, "நாகமணி நல்லவ நம்மளை ஒன்னும் செய்ய மாட்டாள்" என்று தன் வாய்க்குள்ளேயே முனகி கொண்டார்.*



## நூலாசிரியர் பற்றி (சத்யபிரபா)



முனைவர் செ. இராஜேஸ்வரி **(சத்யபிரபா)** மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். **புலமை, செந்தமிழ், வளர் தமிழ், ஓங்கு தமிழ் நா.வா.வின் ஆராய்ச்சி** போன்ற ஆய்விதழ்களில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிட்டார். **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** என்ற ஆய்வு கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைகழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

1988 முதல் தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். *Indian Women–Changes and Challenges, Urban Theology, Vaigai Paripatal, Assisted reproductive technologies and its Impact on Women, Eco Vision and Mission, Bachelor's Study Materials for Social Science [IGNOU], Neuro Ophthalmology Articles* போன்ற பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். 1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் *[Associate editor]* பணியாற்றினார். அப்போது ஜப்பானிய மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளி வந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.

1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக

மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறை திரு.இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி போன்றவற்றில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.

2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அப்போது வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க Tamil for Non-Tamils என்ற பாட நூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாட நூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க Easy English என்ற ஆங்கிலப் பாட நூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.

எம்.ஜி.ஆர். பற்றி **“ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100”** என்ற தலைப்பில் விகடன்.காமில் (காம் இணைய தளத்தில்) முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் www.tamilauthors.com என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் ஒரு

*நூல் எழுதிவருகிறார். எம்.ஜி.ஆர். பற்றி நூறு நூல்கள் எழுத வேண்டும் என்பது இவர் இலட்சியம். அதில் தற்போது* ***வெற்றித் திருமகன்*** *என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் 18 நூல்கள் வெளிவந்துள்ளன.*

*தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல், வறட்சியின் பாடல்கள், உன்னொடு உரையாடுதல் காதலின் மொழி, திட்டிவாசல் பெண்ணொருத்தி, மற்றும் தேனடையும் வரலாறு என்ற கவிதை நூல்களை இவர் முறையே* **"Shade of the Flowering Tree, Songs of Dryness, Speaking with You, Language of Love, The Flower Moon (A Lady at the little gate) and Honey Hive, Ambrosial Kiss (Editor)",** *என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களைச் சென்னை எமரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல் மற்றும் திட்டி வாசல் பெண்ணொருத்தியின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றைப்* ***பூ மர நிழலில் களமும் காலமும் மற்றும் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பியின் பாடுபொருளும் பாசப்பொருளும் [திட்டிவாசல் பெண்ணொருத்தி மட்டும்], என்ற நூல்களையும் '2020 தை மாதத்தில் இன்று' கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு, முத்தமிழ் விரும்பியின் கவிதையில் காதல், முத்தமிழ் விரும்பியின் கவித்திறம்*** *என்ற நூலையும் வெளியிட்டார்.*

*பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை என்ற தலைப்பில்* ***பண்பாட்டு நகர்வுகள் [தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு], தேவேந்திரன், பெண் தெய்வ வழிபாடு, மருத நிலப் பெண் தெய்வங்கள்*** *ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.*

***சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின்***

***சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்*** *என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். இவர் சத்தியபிரபா என்ற புனைப்பெயரில் எழுதிய சிறுகதைகள் '**அமராவதியின் காதல்**' என்ற பெயரில் தொகுக்கப்பட்டு அமேசானிலும், அச்சிலும் வெளிவந்தது. நெருஞ்சி இலக்கிய இதழில் இவரது கட்டுரைகள் வருகின்றன. தினகரன் ஜோதிட மலரில் இவர் எழுதிய "**என்னோட ராசி நல்ல ராசி**" என்ற தொடர் வந்து கொண்டிருக்கின்றது. மாதமிரு முறை வரும் ஆன்மீகம் இதழில் இவரது கட்டுரைகள் தொடர்ந்து வெளிவருகின்றன.*



## நூல் ஆசிரியரின் பிற நூல்கள்




**நூல் பற்றி:**

அமராவதியின் காதல் சிறுகதைத் தொகுப்பிற்குச் சொந்தக்காரர் மதுரைக்காரர். தன்னைப்போலவும் தனது ஊரைப்போலவும் கதைகளையும் மிக எளிமையாகப் படைத்திருக்கிறார். சிறுகதைகளைப் படித்துப் பார்த்தவுடன் மனதில் தோன்றியது இதுதான். மதுரையைப்பற்றி 'அறிந்தவர்களுக்கு' இது புரியும்.

... அமராவதியின் காதல் எனும் இந்நூல் இணைய இதழ்களில் வெளிவந்த சிறுகதைகளின் தொகுப்பாகும். சிறுகதைக்கென இருக்கக்கூடிய எளிமையான வாக்கியங்கள், சுருக்கமான உரையாடல், போன்றவற்றைக் கதை ஆசிரியர் மனதிலிருத்தி மெனக்கெட்டு எழுதியதாகத் தெரியவில்லை. ஆனால் கதைகளை வாசிக்கும்போது இயல்பாக இவையனைத்தும் பொதிந்துள்ளதை உணரமுடிகிறது.

. . . நவீன, தகவல் தொழில் நுட்ப, உலக மயமாக்கப்பட்ட என்று என்னவெல்லாமோ சொல்லப்பட்டு வருகிற சூழலில் காதல் மட்டும் மாறாது தன்னிடத்தை எதற்காகவும் விட்டுக்கொடுக்காது இருப்பதைச் சுட்டுவதுதான் அமராவதியின் காதல் சிறுகதை. மலரினும் மெல்லிது அமராவதியின் காதல்.

... இச்சிறுகதைத் தொகுப்பு எதிர்காலத்தில் மாணவர்களுக்குப் பாடநூலாக அமைவது நலம்..

**முனைவர். ஆ. பாப்பா**
*தமிழ் உதவிப்பேராசிரியர், மதுரை.*

**₹ 120/-**